நாகசுர சக்ரவர்த்தி

திருவாடுதுறை

# டி.என்.இராஜரத்தினம்பிள்ளை

வரலாறு





ப. சோழநாடன்

# நாகசுர சக்ரவர்த்தி

## திருவாவடுதுறை
## டி.என். இராஜரத்தினம் பிள்ளை வரலாறு

ப. சோழநாடன்




வெளியீடு
ரிஷபம் பதிப்பகம்
இரண்டாம் தளம்,
பிளாக் 31/45 இராணி அண்ணாநகர்,
கலைஞர் கருணாநிதி நகர்,
சென்னை - 600 078.

தலைப்பு : நாகசுர சக்ரவர்த்தி திருவாவடுதுறை டி.என். இராஜரத்தினம் பிள்ளை வரலாறு

ஆக்கம் : ப. சோழநாடன் ©

பதிப்பாளர் : தஞ்சை தி. பஞ்சாபகேசன்

முதல்பதிப்பு : 1998 டிசம்பர் 12

பக்கம் : 96

வெளியீடு : ரிஷபம் பதிப்பகம்
இரண்டாம் தளம்,
பிளாக் 31/45 இராணி அண்ணாநகர்,
கலைஞர் கருணாநிதி நகர்,
சென்னை - 600 078.

அச்சுக்கோர்ப்பு : விக்னேஷ் பிரிண்டர்ஸ்
சென்னை - 33.

அச்சு : நடராஜ் ஆப்செட் பிரஸ்
28, முத்து காளத்தி தெரு
திருவல்லிக்கேணி
சென்னை –600 005.
போன் – 8570188 / 8570284

விலை : ரூ.35/-

# பதிப்புரை

'ரிஷபம்' பதிப்பகத்தின் முதன் வெளியீடாக திருவாவடுதுறை இராஜரத்தினம் பிள்ளையின் வரலாற்றை வெளியிடுவதில் மிகுந்த பெருமை அடைகிறோம்.

இராஜரத்தினம் பிள்ளையின் வாழ்க்கை வரலாறு மட்டும் அல்லாமல் 'நாகசுர' வாத்தியத்தின் வரலாறாகவும் இந்நூல் விளங்குகிறது. நாகசுரத்தைப் பற்றி விரிவாக இந்நூல் பேசுவது போல இதற்கு முன்பு தமிழில் நூற்கள் வந்ததாக தெரியவில்லை. ஆசிரியர் வரலாறு படித்தவர் என்பதை அவர் நிகழ்ச்சிகளை தொகுத்தும், காலவரிசைப்படி அடுக்கிச் செல்வதி லிருந்து வாசகர்கள் தெரிந்து கொள்ளலாம்.

திருவாவடுதுறை இராஜரத்தினம் பிள்ளை பற்றிய பல புதிய செய்திகளை கொடுத்துள்ளார். வெறும் வாழ்க்கை வரலாறாக மட்டுமல்லாமல் அந்த காலத்தில் தமிழ்நாட்டில் நாகசுர இசைக்கு எவ்வளவு சிறப்பி லிருந்து என்பதையும் அறியலாம். இராஜரத்தினம் பிள்ளை பற்றிய செய்தி மட்டும் தொகுக்காமல், பல அரிய புகைப்படங்களையும் சேர்த்திருக்கிறோம்.

இந்த சிறப்பான நூலை எழுதிய திரு.ப. சோழ நாடனை பாராட்டுகிறேன். இந்நூல் வெளிவருவதற்கு உறுதுணையாக இருந்த அச்சகத்தாருக்கு என் நன்றி.

தங்கள்

தஞ்சை.தி. பஞ்சாபகேசன்

## என்னுரை

திருநெல்வேலியில் நாகசுரத்தை 'இராஜ வாத்யம்' என்பார்கள். இந்த ராஜவாத்தியத்தை வாசித்த இராஜரத்தினத்தை 'இராகரத்தினம்' என்று சொல்லலாம். இராஜரத்தினம் பிள்ளையையும் - நாகசுரத்தையும் பிரித்து எடுக்க முடியாது.

அஃறிணைப் பொருளான நாகசுரத்தை உயர்திணையாக்கியவர் இராஜரத்தினம் பிள்ளை. அவர் நாகசுரத்தில் இசை உயிர் பெற்று வந்து மக்களுடன் பேசியதை, இன்றும் பல வயதானவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

'நாகசுர' வரலாற்றில் டி.என். ஆருக்கு பெரும் பங்கிருப்பதால் தான், நூலின் முற்பகுதியில் நாகசுரத்தின் வரலாற்றை பல ஆதாரங்களுடன் தொகுத்துச் சொல்லிருக்கிறேன். இனி வரக்கூடிய நாகசுர வரலாற்று ஆய்வாளர்களுக்கு இந்நூல் கொஞ்சமேனும் உதவினால் அதை என்பேறாகக் கருதுவேன். பின்னர் நான் எழுதப்போகும் பெரும் நூலின் முன்னோட்டமே இந்நூல், இதில் உள்ள குறைகள் அனைத்தும் என்னைச் சார்ந்தது. உரியவர்கள் சரியான வரலாற்றைச் சொன்னால் திருத்திக் கொண்டு அடுத்த பதிப்பில் விரிவாக்குவேன். இந்நூலினை தொகுப்பதற்கு பெருமளவு உதவியது இசை அறிஞரும், நாகசுர வரலாற்று ஆசிரியருமான தஞ்சை. திரு.பி.எம். சுந்தரம். அவர்களது கருத்துகள் பலவற்றை எடுத்தாண்டிருப்பதால் முதற்கண் நன்றியை அப்பெருமகனாற்கு உரித்தாக்குகிறேன். டி.என்.ஆர். பற்றிய சில செய்திகளை கூறிய சிதம்பரம் மீனாட்சிசுந்தரம் அவர்களுக் கும் என் நன்றி. மேலும் நன்றிக்குரிய நண்பர்களான திரு.கி.அ. சச்சிதானந்தம், வசந்தகுமார், ஆந்திரா பேங்க் பாலு, அ.ஜ.கான், ரியாஜ் அகமது, ஓவியர் மருதுஅண்ணன், விக்னேஷ் பிரிண்ட்ஸ் ரவி, திருமாவேலன். அரிய இரு படங்களை கொடுத் துதவிய பெரியவர் பிலிம் நியூஸ் ஆனந்தன் அவர்கள் முதலியவர் களுக்கு மீண்டும் என் நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலில் உள்ள சில டி.என்.ஆர். பற்றிய நிகழ்ச்சிகளை தொகுப்பதற்கு உதவிய இதழ்களான: தினமணி, சரிகமபதநி, கலைமகள், கல்கி முதலியவற்றுக்கும் நன்றி.

எனக்கு கல்விக் கண்ணைக் கொடுத்த என் பெற்றோர்களுக்கு இந்நூலினை உரியதாக்குகிறேன்.

அன்புடன்
**ப. சோழநாடன்**

# உள்ளடக்கம்

# நாகசுர வரலாறு

**நாகசுரம் பெயர்க் காரணம்:** நாகசுரக் கருவியை நாகசின்னம், நாகசாரம், நாதஸ்வரம் என்றும் அழைக்கின்றனர். 'நாதஸ்வரம்' என்று சொல்கிற வழக்கம் இந்த நூற்றாண்டின் முப்பதுகள் தொடக்கம்தான் வழக்கில் வந்தது என்று பேரா. பி. சாம்பமூர்த்தி தனது தென்னிந்திய இசை அகராதியில் தெரிவித்துள்ளார். 'நாகசுரம்' தான் சரியான சொல். 'நாதசுரம்' என்ற சொல், கருதும் பொருள் ரீதியில் இச்சொல் இவ்வாத்தியத்திற்குப் பொருந்தாது என்று பேரா. ராகவன் மியூசிக் அகாடமி மலர் கட்டுரையொன்றில் தெரிவித்துள்ளார்.

'நாகசாரம்' என்ற சொல்லே நாகசுரமாக ஆனது என்பது சில ஆய்வாளர்களின் கருத்து. 'சரம்' என்றால் தொடுப்பது என்று பொருள். எ.கா. பூச்சரம். இசைக் கோவையை தொடுப்பதால் 'நாகசரம்' என்று ஆகியிருக்கலாம் என்கின்றனர். சரி. 'நாக' என்ற முன்னொட்டு ஏன் வரவேண்டும்?

**விடை இதுதான்:** ஆரியர்கள் இந்தியாவிற்குள் நுழைந்தபோது இங்கிருந்த பழங்குடியினரை 'நாகர்கள்' என்றே அழைத்தனர். இந்நாகர்கள் பாம்பின் முன் மகுடியை வாசித்து ஆட்டிக்காட்டும் கலையை அவர்கள் வெகுவாக ரசித்தனர். நாகத்தை ஆட்டும் நாகர்கள் மகுடி வாசித்தது போலவே அதை யொத்த கருவியையும் 'நாக' என்ற முன்னொட்டு கொடுத்து அழைத்தனர். எவ்வளவோ நாகரிக வளர்ச்சி ஏற்பட்ட பிறகும்கூட நம்முடன் நாகர்கோவில், நாகூர், நாகப்பட்டினம், நாகலாந்து முதலிய சொற்களும், ஊர்களும் இந்தியாவில் இன்றும் தொடர்ந்து கொண்டு வருவதை கவனிக்க வேண்டும்.

''நாக சின்னம், என்ற பெயர் நாகசுரத்திற்கு முன்னர் வழக்கில் இருந்தது. சின்னம் என்றால் நீண்ட குழற்க ருவி. 'திருச்சின்னம்' என்ற ஊதுகுழல் கருவி உலோகத்தால் செய்யப்பட்டது. இன்றும் வைணவக் கோயில்களிலும், மடங்களிலும் பயன்படுத்தப்படு கிறது. திருச்சின்னம் போலவே நாகசுரமும் இருந்ததால் தான் 'நாகசின்னம்' என்று அழைத்திருக்கின்றனர்.

**நாகசுரத்தின் வளர்ச்சி நிலைகள்:**

எந்த ஒரு பொருளும் நீண்ட கால பயன்பாட்டில் இருக்கிறது என்றால் அது, காலத்தின் தன்மைக்கேற்ப தன் வடிவத்தையும் - பரிணாம வளர்ச்சிக்கேற்ப மாற்றம் பெற்றுக் கொண்டுதான் வந்திருக்கும். வடமொழி நூற்களில் கூறப்படுவது போல திடீரென்று தோன்றுவது இல்லை.

இன்று நாம் பயன்படுத்தும் வீட்டு பயன்பாட்டுக் கருவிகள், வேட்டைக்கருவிகள். உழு கருவிகள், வலைகள் போன்றவை எல்லாம் பழங்குடியினரின் கண்டுபிடிப்புகள்தாம். அவ்வாறே இசைக்கருவிகளும் பழங்குடியினர் கண்டுபிடித்தவற்றை காலத்தின் தன்மைக்கேற்றவாறு மத்தியகால மனிதன் இன்றைய வடிவத்திற்கு கொண்டு வந்திருக்கிறான். பழங்கால மக்கள் இயற்கையுடன் இயைந்து வாழ்ந்து அதற்கேற்ப இவற்றையும் பயன்படுத்தி வந்தனர்.

'பூவரசு' இலையை சுருட்டி வாயில் வைத்து ஊதியே 'பீபீ' என்றஇலைச் சுருட்டு நாயனம் என்ற இசைக்கருவியைக் கண்டுபிடித்தான். அது சில மணிநேரங்களில் தன் உருவையே இழந்த காரணத்தினால் பூவரசு இலையைவிட வலிமையான இலையைத் தேடிய போதுதான் 'தென்னோலை' அவனுக்கு பயன்பட்டது. அதை வைத்து அதிகளவு சுருட்டி கூம்பு போன்ற முனைவரும்படி அழுத்தி சுற்றி, சுற்றிய ஓலை விடுபடாமல் இருக்க சிறுகுச்சியை ஒடித்து அதன் வாயில் வைத்து இறுக்கி, சில நாட்கள் வரை வரும்படி பயன்படுத்தி வந்தனர். இதையடுத்து நாகரீககால வளர்ச்சியை மனிதன் அடைந்து நிலையான இடத்தில் வசித்து, வேளாண்மையை செய்ய தொடங்கிய காலத்திலேதான் நாம் இன்று பார்க்கும் - நாகசுரத்தின் மிகச் சிறிய வடிவமான 'முகவீணை'யைக் கண்டுபிடித்தான். 'முகவீணையின் அடுத்த கட்ட வளர்ச்சியே 'திமிரி' வகை நாகசுரம். திமிரியிலிருந்தே இன்றைய பாரிவகை நாகசுரம் வளர்ந்து வந்துள்ளது.

'எழில் இயம்ப இயம்பும் வெண் சங்கு எங்கும்' என்கிறது திருவாசகம், இதற்கு உரை சொல்லவந்த வ. சு. செங்கல்வராயப் பிள்ளை, இப்பதம் நாகசுரத்தைக் குறிப்பதாக பொருள் கொண்டு கூறியுள்ளார். 'மாதர் மடப்பிடியும்' என்ற தேவாரத்தில் 'எழில் பயில் குயில்' என்று வரும் இடம் நாகசுரத்தைக் குறிப்பதாக தெரிவிக்கின்றனர். ஏழு சுரத்துளைகளை உடைய நாகசுரமே

ஏழில் என்பதன் குறுக்கமாக ‘எழில்’ என அழைக்கப்பட்டதாகத் தெரிவிக்கின்றனர். இதன் மூலம் நாகசுரம் தேவாரக் காலம் முதல் வழக்கில் இருந்து வந்ததை அறிகிறோம்.

**நாகசுரக்காரர்கள் யார்?**

நாகசுரக் கருவியை இசைக்கும் கலைஞர்களை நாயனக்காரர்கள், மேளக்காரர்கள் என்று, இன்று அழைக்கிறோம். ‘பயிர்கள் விளைவித்து உண்போர் வேளாளர்கள்’. இசையை விளைவிக்கும் நாங்கள் ‘இசை வேளாளர்கள்’ என்று அவர்கள் தெரிவிக்கின்றனர். பண்டைய சோழநாடு முழுவதும் பரவி, இசைத்தொண்டு செய்து வந்திருக்கின்றனர். இன்றைக்கும் தஞ்சை, திருச்சி, மாவட்டங் களிலேதான் அதிகமாக வாழ்ந்து வருகின்றனர்.

நாகசுரம், ஒத்து, தவில், தாளம் ஆகிய இசைக்கருவிகளை இசைக்கும் கலைக்குழுவை ‘பெரிய மேளம்’ என்ற அழைத்த காரணத்தினாலே தான் ‘மேலக்காரர்கள்’ என்ற சொல் வழக்கத்தில் வந்தது. இதுபோலவே நடனம் ஆடும் மகள், நட்டுவனார், குழல், தாளம், மத்தாளம் முதலிய இசைக்கும் குழுவை ‘சின்னமேளம்’ என்று அழைத்தனர். ‘சின்ன மேளத்தை’ அக்காலத்தில் எடுத்த புகைப்படம் போல தாராசுரம் கோயில் சிற்பத்தொகுதிகளை காணும் போது ஒவ்வொருவரும் வியப்பர்.

பெரியமேளம், சின்ன மேளம் என்ற இரு கலைக்குழுவினருமே நமது பண்டைய ‘பாணர் குல’ மக்களாவார்கள். இவர்களே பரம்பரை பரம்பரையாக இசையையும், நாட்டியத்தையும் பயின்று இன்றுவரை கொண்டு வந்து நம்மிடம் கையளித்துள்ளனர்.

மகாபரத சூடாமணி, நாகசுரத்தை ‘மங்கள வாத்யம்’ என்கிறது. கோவில், திருவிழா, மண நிகழ்ச்சி, காதுகுத்துதல், மஞ்சள் நீராட்டு, நிச்சயதார்த்தம், புதுமனை புகுவிழா என்று தமிழரின் அனைத்து நிகழ்விலும் நாகசுரம் இடம் பிடித்துள்ளதை அறியும் போது அது உண்மைதான் என்றே தோன்றுகிறது.

சங்க காலத்தில் யாழும், யாழிசைக்கும் பாணர்களும் எவ்வளவு சிறப்புக்கு உரியவர்களாக இருந்தனர் என்பதை பத்துப்பாட்டி லுள்ள பாணாற்றுப்படைகள் விளக்குகின்றன. யாழ்க் கருவியின் முக்கியத்துவம் 9-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு மெல்ல, மெல்ல மறைய அந்த இடத்தை வீணையும், நாகசுரமும் பிடித்துக் கொண்டதை தமிழக இசை வரலாறு தெளிவாக விளக்குகிறது. அக்கால பாணர்களே இக்கால நாகசுரக்காரர்கள் என்பதை

தொன்றுதொட்டு இசைஞர்களாகவும், நட்டுவனார்களாகவும், ஆடற்கலைஞர்களாகவும் அவர்கள் தொண்டு செய்து வரும் முறையால் அறிகிறோம். பண்டைய பாணர்கள் பெற்ற பெரும் மதிப்பையும், மரியாதையையும் இன்றைய நாகசுரக்காரர்கள் பெற்று வந்துள்ளனர். புகழ்பெற்ற நாகசுரக்காரர்களுக்கு தங்கம், வெள்ளி, நாகசுரங்கள் ஆட்சியாளர்கள் தந்து மதிப்பு செய்திருக்கின்றனர்.

நாகசுரக்காரர்களுக்கு 'நாகபாசத்தார்' என்ற பெயர் இருந்ததை குடந்தைப் செப்பேடு காட்டுகிறது.

சோழர்கள் காலத்தில் இருந்த நாகசுரக்காரர்களுக்கு 'நயினார் அடியார்' என்ற பெயர் இருந்தது என்பதை திருவாரூர் நாகசுர பரம்பரையினர் இன்றும் காத்து வருகின்றனர். சோழர் காலத்தில் கொடுக்கப்பட்ட தந்த நாகசுரமும், பட்டயங்களும் இன்றும் அவர்களிடத்தில் இருக்கிறது.

தமிழகத்தை பிறமொழியினர் ஆண்ட சமயத்திலும் கூட தமிழ் இசைமரபைக் கட்டிக் காத்தவர்கள் நாகசுர வித்வான்களே ஆவர். இன்று கர்நாடக இசை மும்மூர்த்திகள் என்று போற்றப்படும் மூவரும் இசை பயின்றது நாகசுரக்காரர்களிடத்தில்தான். தியாகய்யர், திருவையாறு சுப்பையா பிள்ளை என்ற நாகசுர வித்வானிடம்தான் இசைபயின்றார் என்ற செய்தி, தற்காலத்தில் தியாகய்யரைப் பற்றி எழுதப்படும் வரலாற்று நூல்களில் இருட்டடிப்பு செய்யப்படுகிறது. கர்நாடக இசை மும்மூர்த்திகளுக்கு முற்பட்ட தமிழிசை மும்மணிகளில் ஒருவர் இசை வேளாளர் பரம்பரையில் வந்தவர்தான்.

**கம்பர்:**

திருநெல்வேலி மாவட்டத்தில் நாகசுரக்காரர்களுக்கு கம்பர் என்ற பெயர் உண்டு. எ.கா. திருநெல்வேலி சின்ன சுப்பையா கம்பர்; பெரிய சுப்பையா கம்பர், ஐயா குட்டி கம்பர் போன்ற புகழ்பெற்ற நாகசுர வித்வான்கள் இருந்திருக்கின்றனர். இவர்கள் தங்களை 'உவச்சர் குலம்' என்கின்றனர். 'கம்பர்' என்ற பெயரும், உவச்சர் குலமும் காட்டுவது என்ன? கம்பராமாயணம் எழுதிய கம்பரும் இசைவேளாளர் என்பதே. மேலும் கம்பராமாயணத்தில் தமிழிசை பற்றி எண்ணற்ற குறிப்புகள் உண்டு. மேலும் கம்பர் பிறந்த தேரழந்தூரில் தான் 'நாகசுரம்' செய்யும் தச்சர்கள் முன்னர் வாழ்ந்து வாழ்ந்தனர். 'கம்ப சேவை' என்ற உற்சவத்தை இசை வேளாளர்கள் நடத்தி வருவதும் கவனிக்கத் தக்கது.

## நாகசுரக்காரர்கள்

### (காலவரிசைப்படி)

| | | |
|---|---|---|
| 01. | பந்தணைநல்லூர் வீருசாமி பிள்ளை | 1815-1889 |
| 02. | நாச்சியார்கோவில் அமிர்தம் பிள்ளை | 1819-1904 |
| 03. | கீவளூர் கந்தசாமி பிள்ளை | 1826 - 1897 |
| 04. | உறையூர் முத்துவீருசாமி பிள்ளை | 1828 - 1892 |
| 05. | கூறைநாடு நடேச பிள்ளை | 1830 - 1925 |
| 06. | கும்பகோணம் சிவக்கொழுந்துபிள்ளை | 1838 - 1911 |
| 07. | கோவிலடி லக்ஷ்மண பிள்ளை | 1840 - 1919 |
| 08. | கோட்டை சுப்பராய பிள்ளை | 1843 - 1919 |
| 09. | வேதாரண்யம் குப்புசாமி பிள்ளை | 1850 - 1901 |
| 10. | திருவானைக்கோவில் துரைசாமி பிள்ளை | 1851 - 1922 |
| 11. | திருவாரூர் சாமிநாத பிள்ளை | 1854 - 1925 |
| 12. | நாகப்பட்டணம் வேணுகோபால் பிள்ளை | 1861 - 1917 |
| 13. | கோட்டூர் சௌந்திரராஜ பிள்ளை | 1865 -1952 |
| 14. | சிக்கில் ருத்ராபதி பிள்ளை | 1865 - 1937 |
| 15. | தஞ்சாவூர் கிருஷ்ணன் | 1865 - 1931 |
| 16. | பந்தணைநல்லூர் அய்யாக்கண்ணு பிள்ளை | 1868 - 1944 |
| 17. | மன்னார்குடி சின்னப்பக்கிரிப் பிள்ளை | 1869 - 1915 |
| 18. | திருப்பாம்புரம் நடராஜசுந்தரம் பிள்ளை | 1869 - 1938 |
| 19. | வண்டிக்காரத்தெரு ராமுப் பிள்ளை | 1871 - 1949 |
| 20. | திருச்சேறை வெங்கடராம பிள்ளை | 1871 - 1949 |
| 21. | திருக்கண்ணமங்கை நடேச பிள்ளை | 1872 - 1942 |
| 22. | திருவாரூர் வீதிவிடங்கன் பிள்ளை | 1873 - 1933 |
| 23. | திருமருகல் நடேச பிள்ளை | 1874 - 1903 |
| 24. | பந்தணைநல்லூர் குருசாமி பிள்ளை | 1875 - 1963 |
| 25. | உறையூர் கோபாலசாமி பிள்ளை | 1876 - 1917 |
| 26. | மதுரை பொன்னுசாமி பிள்ளை | 1877 - 1929 |
| 27. | மன்னார்குடி நாராயணசாமி பிள்ளை | 1880 - 1940 |
| 28. | செம்பொன்னார்கோவில் ராமஸ்வாமி பிள்ளை | 1880 - 1923 |

| | |
|---|---|
| 29. தஞ்சாவூர் கன்னையா ரெட்டியார் | 1880 - 1939 |
| 30. உறையூர் நாராயணசாமி பிள்ளை | 1881 - 1948 |
| 31. ராஜாமடம் சண்முகசுந்தரம் பிள்ளை | 1883 - 1931 |
| 32. திருவலஞ்சுழி மாணிக்கம் பிள்ளை | 1883 - 1967 |
| 33. உறையூர் ராமசாமி பிள்ளை | 1885 - 1948 |
| 34. சிதம்பரம் வைத்தியநாத பிள்ளை | 1884 - 1937 |
| 35. பெரியதெரு சுப்பிரமணிய பிள்ளை | 1886 - 1964 |
| 36. திருவிடைமருதூர் சிவக்கொழுந்து பிள்ளை | 1887 - 1913 |
| 37. கோட்டூர் குப்புசாமி பிள்ளை | 1887 - 1955 |
| 38. சிலகலூரிபேட்ட பெத்தமௌலா | 1890 - 1948 |
| 39. பெரம்பலூர் அங்கப்ப பிள்ளை | 1890 - 1964 |
| 40. திருச்சேறை முத்துகிருஷ்ண பிள்ளை | 1892 - 1929 |
| 41. திருவீழிமிழலை சுப்பிரமணிய பிள்ளை | 1893 - 1984 |
| 42. திருத்துறைப்பூண்டி சொக்கலிங்கம் பிள்ளை | 1892 - 1972 |
| 43. உறையூர் அப்பாவுசுந்தரம் பிள்ளை | 1893 - 1966 |
| 44. வண்டிக்காரத்தெரு சண்முகசுந்தரம் பிள்ளை | 1894 -1968 |
| 45. எலந்துரை கோவிந்தசாமி பிள்ளை | 1895 - 1962 |
| 46. சிறுபுலிலூர் கண்ணப்பா பிள்ளை | 1896 -1944 |
| 47. கீரனூர் சின்னத்தம்பி பிள்ளை | 1897 - 1942 |
| 48. எலந்துறை நாராயணசாமி பிள்ளை | 1897 - 1957 |
| 49. செம்பொன்னார்கோவில் கோவிந்தசாமி பிள்ளை | 1897 - 1955 |
| 50. ஸ்ரீரங்கம் துரைக்கண்ணு பிள்ளை | 1897 - 1954 |
| 51. மன்னார்குடி மாணிக்கம் பிள்ளை | 1898 - 1947 |
| 52. திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளை | 1898 - 1956 |
| 53. கும்பகோணம் ராமய்யா பிள்ளை | 1900 - 1972 |
| 54. மைசூர் பேலூரய்யா | 1900 - 1971 |
| 55. திருவிடைமருதூர் விருசாமிபிள்ளை | 1901 - 1973 |
| 56. திருக்களர் கோவிந்தசாமி பிள்ளை | 1903 - 1958 |

57. திருப்பாம்புரம் சோமசுந்தரம் பிள்ளை 1904 - 1971

58. செம்பொன்னார்கோவில் தக்ஷிணாமூர்த்தி பிள்ளை 1904 - 1976

59. இஞ்சிக்குடி பிச்சைக்கண்ணு பிள்ளை 1904 - 1975

60. அய்யம்பேட்டை வேணுகோபால பிள்ளை 1904 - 1965

61. சூரியனார்கோவில் நாராயணஸ்வாமி பிள்ளை 1905 - 1973

62. தாலிபர்த்தி பிச்சஹரி 1905 - 1965

63. திருவெண்காடு சுப்பிரமணிய பிள்ளை 1906 - 1986

64. ஆண்டாங்கோவில் கருப்பையா பிள்ளை 1909 - 1953

65. திருவாவடுதுறை நடராஜசுந்தரம் பிள்ளை 1912 - 1956

66. தருமபுரம் அபிராமிசுந்தரம் பிள்ளை 1912 - 1962

67. குழிக்கரை காளிதாஸ் பிள்ளை 1913 - 1973

68. குழிக்கரை பிச்சையப்பா பிள்ளை 1913 - 1979

69. பந்தணைநல்லூர் ரத்தினம் பிள்ளை 1916 - 1956

70. திருச்சேறைகிருஷ்ணமூர்த்தி பிள்ளை - 1921 - 1985

71. காருகுறிச்சி அருணாசலம் 1923 - 1962

72. வேதாரண்யம் வேதமூர்த்தி பிள்ளை 1924 - 1962

73. திருமெய்ஞ்ஞானம் நடராஜசுந்தரம் பிள்ளை 1926 - 1981

74. கோட்டூர் ராஜரத்தினம் பிள்ளை 1932 - 1987

75. மதுரை கே.பி.என். பொன்னுசாமி, சேதுராமன் சகோதரர்கள்

76. சேக்சின்ன மௌலானா

77. மதுரை M.S.பொன்னுத்தாய்

78. நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன்

திருநெல்வேலி கலைஞர்கள்

79. வத்திராயிருப்பு குற்றாலம் அண்ணாவி

80. இராஜபாளையம் பெருமாள் அண்ணாவி

81. திருநெல்வேலி சின்ன சுப்பையா கம்பர்

82. பெரிய சுப்பையா கம்பர்

83. ஐயா குட்டி கம்பர்

84. அருப்புக்கோட்டை கணேசன்.

# தவில் கலைஞர்கள்

(கால வரிசைப்படி)

| | | |
|---|---|---|
| 01. | கீவளூர் சுப்பராய பிள்ளை | 1787 - 1846 |
| 02. | கும்பகோணம் சக்கரபாணிப் பிள்ளை | 1859 - 1905 |
| 03. | நாச்சியார்கோவில் சக்திவேல் பிள்ளை | 1861 - 1937 |
| 04. | ஸ்ரீவாஞ்சியம் கோவிந்தப் பிள்ளை | 1863 - 1907 |
| 05. | வழிவூர் பொன்னுசாமிப் பிள்ளை | 1864 - 1924 |
| 06. | மன்னார்குடி பக்கிரிப் பிள்ளை | 1867 -1937 |
| 07. | பசுபதிகோவில் வீரபத்திப் பிள்ளை | 1867 - 1935 |
| 08. | லால்குடி அங்கப்பப் பிள்ளை | 1870 - 1931 |
| 09. | பாபநாசம் முத்தையா பிள்ளை | 1873 - 1932 |
| 10. | அம்மாப்பேட்டை பக்கிரிப் பிள்ளை | 1874 - 1920 |
| 11. | அம்மாசத்திரம் கண்ணுசாமிப் பிள்ளை | 1876 - 1927 |
| 12. | சிக்கில் முத்துக்குமரப் பிள்ளை | 1876 - 1933 |
| 13. | பழனி முத்தையா பிள்ளை | 1878 - 1945 |
| 14. | கும்பகோணம் தாதக்கிருஷ்ணன் பிள்ளை | 1879 - 1935 |
| 15. | தில்லையாடி சீனிவாச பிள்ளை | 1876 - 1960 |
| 16. | திருவாழப்புத்தூர் பசுபதிப் பிள்ளை | 1879 - 1958 |
| 17. | சிக்கில் நாராயணப் பிள்ளை | 1880 - 1941 |
| 18. | காவாலக்குடி சோமசுந்தரம் பிள்ளை | 1882 - 1952 |
| 19. | காரைக்கால் மலைப்பெருமாள் பிள்ளை | 1884 - 1951 |
| 20. | கரந்தை ரத்தினம் பிள்ளை | 1884 - 1956 |
| 21. | பந்தநல்லூர் மரகதம் பிள்ளை | 1884 - 1962 |
| 22. | இலுப்பூர் நல்லகுமார் பிள்ளை | 1885 - 1930 |
| 23. | பாபநாசம் சீமான் பிள்ளை | 1885 - 1949 |
| 24. | திருக்காரவாயில் கோபாலப் பிள்ளை | 1886 -1976 |

25. திருச்செங்காட்டங்குடி ருத்திராபதிப் பிள்ளை 1887 - 1963
26. வழிவூர் முத்துவீர் பிள்ளை 1888 - 1922
27. காரைக்கால் சோணாசிப் பிள்ளை 1888 - 1967
28. வேதாரணியம் பொதுச்சாமிப் பிள்ளை 1890 - 1931
29. நீடாமங்கலம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை 1894 - 1949
30. குண்டுபல்லி குரவய்யா 1897 - 1972
31. திருமுல்லைவாயில் முத்துவீர் பிள்ளை 1897 - 1972
33. திருக்கடையூர் சின்னையா பிள்ளை 1900 - 1973
34. விராலிமலை முத்தையா பிள்ளை 1900 - 1934
35. பாபநாசம் ராமசாமிப் பிள்ளை 1903 - 1964
36. பந்தநல்லூர் ரத்தினம் பிள்ளை 1903 - 1936
37. திருமங்கலம் சுந்தரேச பிள்ளை 1904 - 1954
38. யாழ்ப்பாணம் காமாட்சிசுந்தரம் பிள்ளை 1904 - 1951
39. இலுப்பூர் (மலைக்கோட்டை)
பஞ்சாபகேச பிள்ளை 1905 - 1935
40. கும்பகோணம் தங்கவேல் பிள்ளை 1906 - 1964
41. நாச்சியார்கோவில் ராகவப் பிள்ளை 1910 - 1964
42. திருநகரி நடேச பிள்ளை 1910 - 1980
43. திருவிழந்தூர் ராமதாஸ் பிள்ளை 1915 - 1968
44. திருப்பதி முனிராமய்யா 1923 - 1984
45. நீடாமங்கலம் சண்முகவடிவேல் பிள்ளை 1929 - 1963
46. யாழ்ப்பாணம் தட்சிணாமூர்த்தி பிள்ளை 1933 - 1975
47. வலங்கைமான் சண்முகசுந்தரம்
48. ஹரித்துவாரமங்கலம் பழனிவேல்
49. வலையப்பட்டி சுப்பிரமணியம்

# இசைத் தட்டில் பதிவு செய்தோர்

அக்கால நாகசுரக்காரர்கள் எவ்வாறு இசையை வாசித்தனர் என்பதை அறிய இன்று நமக்கு கிடைப்பவை பழைய கிராமபோன் ரிக்கார்டுகளே. அவை இல்லையெனில் இன்று பல வித்வான்களின் வாசிப்பு முறை எப்படி இருந்தது என்பதும், ஒவ்வொருவரிடமும் இருந்த திறமை, வாசிப்பு முறை பெற்ற வளர்ச்சி முதலியவை தெரியாமலே போயிருக்கும். எச்.எம்.வி. நிறுவனம் கி.பி. 1900 ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்டது. எச்.எம்.வி. கிராமபோன் கம்பெனியை வைத்தே அதற்கு முன்பு, பின்பு என பிற்கால இசை வல்லுனர்கள் காலத்தை கணக்கிடும் அளவுக்கு எண்ணற்ற இசைத் தட்டுகளை வெளியிட்டது. இதைப் பார்த்தே கொலம்பியா, ஓடியன் முதலியவை பின்னர் தோன்றின. அவையும் தங்கள் பங்குக்கு பல இசைவாணர்களின் குரலையும், இசையும் பதிவு செய்தனர். இசைத்தட்டில் பதிவு செய்த நாகசுர வித்வான்கள்:

1. செம்பொன்னார் கோவில் ராமஸ்வாமி பிள்ளை (1880 - 1923) இவரே முதன் முதலில் நாதஸ்வர இசையை. இசைத்தட்டில் பதிவு செய்தவர். இவர் 'ரத்தி' மேளத்தை இசைத்தட்டில் பதிவு செய்துள்ளார்.
2. மதுரை பொன்னுச்சாமி நாயனக்காரர் (1877 - 1929) 'பூர்வீக சங்கீத உண்மை' என்ற இசை ஆய்வு நூலை எழுதி வெளியிட்டவர். அதில் 'மேளகர்த்தா ராகங்கள் 72 இல்லை. 32 மட்டுமே' என்று அறிவியல் பூர்வமான முடிவை வெளியிட்டு சங்கீத ஊழல்களை வெளிக்கொணர்ந்தவர். பல இசைத்தட்டுகளில் பதிவு செய்திருக்கிறார். அவர் வாசித்துள்ள 'இந்தோளராகம்' அவர் புகழை பறைசாற்றும் என்கிறார் நாகசுர ஆய்வாளர் பி.எம்.சுந்தரம்.
3. திருச்சேறை வெங்கடராமபிள்ளை (1871 - 1949) சில இசைத் தட்டுகளில் இவரது நாகசுர இசை பதிவு செய்யப்பட்டுள்ளது.
4. செம்பொன்னார் கோவில் கோவிந்தசாமிபிள்ளை (1897 - 1955). தந்தையைப் போலவே இவரும் 1937 ஆம் ஆண்டில் நீடாமங்கலம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை தவிலுடன், தன் சகோதரர் தட்சிணாமூர்த்தியுடன் இணைந்து கொலம்பியா கிராமபோன் கம்பெனியாரிடம் 9 இசைத்தட்டுகளை பதிவு செய்துள்ளார்.

5. கீரனூர் சகோதரர்கள்: சின்னத்தம்பி பிள்ளை *(1897 - 1942)* சிறுபுலியூர் கண்ணப்பா பிள்ளை *(1896 - 1944)*

   இவர்கள் இருவரும் சில இசைத்தட்டுகளில் தங்களின்நாகசுர இசையைப் பதிவு செய்திருக்கின்றனர். 'ஒரே நாகஸ்வரம் ஒலிப்பது போலவும், பாட்டுக் கச்சேரியைக் கேட்பது போன்றுமிருக்கும்' என்கிறார் பி.எம். சுந்தரம்.

6. திரு.வீழிமிழலை சகோதரர்கள்: சுப்பிரமணிய பிள்ளை *( 1893 - 1984)* - நடராஜ சுந்தரம்பிள்ளை, *91* ஆண்டுகள் வாழ்ந்த சுப்பிரமணிய பிள்ளையின் நாகசுர இசை பதிவு செய்யப் பட்டுள்ளது.

7. திருவாவடுதுறை இராஜரத்தினம் பிள்ளை: *(1898 - 1956)* பல இசைத்தட்டுகள்.

8. கக்காயி நடராஜ சுந்தரம்பிள்ளை *(1912 - 1956)* TNR உடன் சேர்ந்தும் தனித்தும் இசைத்தட்டுகளை வழங்கியுள்ளார்.

9. குழிக்கரை பிச்சையப்பா *(1913 - 1979)* பல இசைத்தட்டுகள்.

10. காருக்குறிச்சி அருணாசலம் *(1923- 1962)* பல இசைத்தட்டுகள்.

11. திருமெய்ஞ்ஞானம் நடராஜ சுந்தரம்பிள்ளை *(1926 - 1981)* கொலம்பியா இசைத்தட்டுகளில் பதிவு செய்துள்ளனர்.

12. மதுரை கே.பி.என். சேதுராமன் பொன்னுசாமி சகோதரர்கள் பல இசைத்தட்டுகளில் பதிவு செய்துள்ளனர்.

13. திருவெண்காடு சுப்பிரமணிய பிள்ளை *(1906 - 1986)* பல இசை தட்டுகள்.

14. நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் - பல இசைத்தட்டுக்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன.

15. சேக் சின்னமௌலானா - பல இசைத்தட்டுக்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன.

பிற்காலத்தில் பலரும் தாங்கள் கருவி இசையை இசைத் தட்டிலும், ஒலி நாடாவிலும் பதிவு செய்து வருகின்றனர். மேலே கண்டோரின் இசைத்தட்டுகள் மட்டுமே இன்று கிடைக்கின்றன.

## திரைப்படங்களில் நாகசுர கலைஞர்கள்

தமிழ்த் திரைப்படக்கலை வளரத் தொடங்கியவுடன் தனக்கு முன்பிருந்த கலைகளை எல்லாம் தன்னுள் ஈர்த்துக்கொண்டது. அதன்படி நாகசுரக் கலைஞர்களும் மெல்ல இசைப்பகுதியில் தலைக்காட்டவும், இசைக்கவும் தொடங்கினர்.

முதலில் திரைப்படத்திற்குள் வந்தவர் திருவாவடுதுறை டி.என். இராஜரத்தினம் பிள்ளை. இவரையடுத்து, திருவெண்காடு சுப்பிரமணிய பிள்ளை 'நண்பன்', 'ராஜபக்தி' போன்ற திரைப்படங்களில் இவர், தன் நாகசுர இசையை வழங்கியுள்ளார்.

'கொஞ்சும் சலங்கை' படத்தில் 'சிங்காரவேலனே தேவா....'' பாஉலில், காருக்குறிச்சியாரின் நாகசுர இசையும் சேர்ந்து ஒலித்தது.

'ஔவையார்' படத்தில் ஔவையாரை, சோழமன்னன் அரசமரியாதையுடன் அழைக்கும் காட்சியில், நாகசுரம் வாசித்தபடி இஞ்சிக்குடி பிச்சைக்கண்ணு தோன்றுவார். நாகசுர இசைமட்டுமே பின்னணி, இசையாக பெயர் போடும்போது முதலில் வந்த படம் 'கிருஷ்ணபக்தி' இப்படத்திற்காக வாசித்தவர் நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன் ஆவார்.

'தில்லான மோகனாம்பாள்' படத்திற்காக எம்.பி.என். சேதுராமன், பொன்னுசாமி சிறப்பாக வாசித்திருந்தனர். இவர்கள் புகழ்பெற்ற மதுரை பொன்னுசாமி நாயனக்காரர் பேரர்கள் ஆவர்.

திருமெய்ஞானம் நடராஜ சுந்தரம் பிள்ளை, 'வெளிச்சத்துக்கு வாங்க', 'நாக நர்த்தகி' என்ற படங்களில் பின்னணி இசையாக நாகசுர இசையை வழங்கியுள்ளார்.

பலப்பரீட்சை, கந்தர் அலங்காரம், புதுப்பட்டி பொன்னுத்தாயி முதலிய படங்களில் திருவிழா ஜெய்சங்கர் - வலையப்பட்டி சுப்பிரமணியம் இணைந்து பின்னணி இசையை வழங்கி யுள்ளனர்.

## நாகசுரம் - பாகங்கள்



## நாகசுரமும் அதன் பாகங்களும்

**நாகசுர வகைகள்:** நாகசுரம் காலத்திற்கேற்ப வளர்ச்சியடைந்து வந்துள்ளது என்பதை முன்னே கண்டோம். இன்று நாம் பார்க்கும் நாகசுரம் பாரி நாகசுரம். இதற்கு முன் இருந்த வகை: 'திமிரி நாகசுரம்'. திமிரி நாகசுரம் இன்றுள்ள நாகசுரத்துடன் ஒப்பிட்டால் பாதிபங்குதான் இருக்கும். ஆனால் 5 கட்டை சுருதியில் ஒலிக்கும். பாரிநாகசுரம் நீண்டது. ஆனால் சுருதி குறைவானது. திமிரியில் மூன்று கட்டை சுருதிக்கு குறையாமல் 5 கட்டைச் சுருதிவரை வாசிக்கலாம். பாரி என்பது இரண்டரைக் கட்டை சுருதிக்கு மேற்படாமல் ஒரு கட்டைச் சுருதிவரை வாசிக்க உதவுகிறது. திமிரி நாகசுரம் வாசிப்பது கடினம். ஆனால் இதன் ஒலி 2 கி.மீ. வரை கேட்குமாம். திமிரி என்ற பெயர் பேரொலி எழுப்புவதால் உண்டானது. இதை திருவாரூர் தியாகராஜர் கோவிலில் மட்டும் பார்க்கலாம்.

'பாரி நாகசுரம்' 20-ஆம் நூற்றாண்டில் தான் உண்டாக்கப் பட்டது. 'பாரி' என்றால் 'பெரியது'. இன்றும் கூட ஈழத்தில் பெரியது என்ற சொல்லைக் குறிப்பிட வழக்கத்தில் உள்ளது. 1935 வரை 'திமிரி' நாகசுரமே வழக்கத்தில் இருந்தது. ஒலிபெருக்கி இல்லாத காலத்தில் திமிரி நாகசுரம் தேவைப்பட்டது. ஒலிபெருக்கி வந்த பின்னர் சுருதி குறைந்த பாரி நாகசுரம் பெருமளவில் வழக்கத்திற்கு வந்தது. திமிரி இன்று வழக்கொழிந்து போய்விட்டது.

மதுரை பொன்னுச்சாமி பிள்ளை சிறந்த இசை அறிஞரும், நாகசுரக்காரரும் ஆவார். இவர் திமிரி நாகசுரத்தின் ஓசையையும், பாரிநாகசுரத்தின் ஓசையையும் தெளிவாக ஆராய்ந்து திமிரி சுருதியாக இல்லாமலும், பாரி சுருதியாக இல்லாமலும் நடுநிலையான இடபாரி நாகசுரத்தைக் கண்டுபிடித்தார். மேலும் மரத்தினாலே முழுவதும் செய்யப்பட்ட நாகசுரத்தைக் கொண்டும் வாசிக்கும் முறையும் இவரால்தான் தொடங்கப்பட்டன.

நாகசுரம் 'ஆச்சா' மரத்தில்தான் இன்று செய்யப்பட்டு வருகிறது. தேரழுந்தூர், நாச்சியார் கோயில், திருவாவடுதுறை முதலிய இடங்களில் இக்கருவியைச் செய்யும் ஆசாரிகள் இருப்பதாகத் தெரிகிறது.

**நாகசுர பாகங்கள்:** சீவாளி, கெண்டை, உடல், கீழணசு என்ற நான்கு உறுப்புக்களே முக்கியமானவை.

‘‘நாகசுரத்தின் மேலும் கீழும் இரண்டு ‘அணைசு’ என்ற பாகம் பொருத்தப்படும். வெண்கலத்தால் அணைசுகள் செய்யும் வழக்கம் முற்காலத்தில் இருந்தது. தற்காலத்தில் மரத்தாலே செய்யப்பட்டு வருகிறது. மேல் அணைசு சுமார் 4 அங்குலம் இருக்கும்.

மேல் அணைசிற் செருகி உதட்டில் வைத்து வாசிப்பதற்கு உதவியாக இருக்கும் கருவி ‘சீவாளி’ அல்லது ‘நறுக்கு’ என்று பெயர். கொருக்குத் தட்டை என்ற நாணல் புல்லிலிருந்து இது தயாரிக்கப்படுகிறது. இரண்டு அங்குல நீளத்திற்கு நறுக்கி நெல் வேகவைக்கும்போது அதனுடன் சேர்த்துப் பதமாக வேகவைத்து, எடுத்துக் கிட்டிப் பலகையில் கொடுத்து நன்றாக நெருங்குமாறு செய்து, ஈரம் உலர்ந்த பின் அதன் அடிப்பாகத்தை முறுக்கிய நூலால் ஐந்தாறு சுற்று இறுக்கிக் கட்டி அமைப்பது சீவாளியாகும். இதை நேரே அணைசில் பொருத்தி வாசித்தல் இயலாது. அணைசிற்கும் சீவாளிக்கும் இடையே கெண்டை என்ற ஒன்று வேண்டும்.

செப்புத் தகட்டினால் ஓர் அங்குல நீளத்திற்கு மேற்பாகத்தைக் காட்டிலும், அடிப்பாகம் சற்று விரிந்திருக்கும் சிறு குழாய் ஒன்று செய்ய வேண்டும். அதன் இரு நுனிகளிலும் தேங்காய் ஓட்டினால் செய்த இரண்டு வளையங்கள் கோர்த்து வரிந்து கட்டப் பட்டிருக்கும். இவ்வாறான கெண்டை என்னும் உறுப்பு அணைசோடு பொருத்தப்படும். அக்கெண்டையின் மேல் சீவாளியைச் செருகி வாசிக்கலாம். வாசிக்கும்போது உதட்டின் அமுக்கத்தாலும் சீவாளியின் வாய் சில சமயங்களின் ஒட்டிக் கொள்ளும். அதைத் திறக்கச் சுமார் நான்கு அங்குல நீளமுள்ளதாய்த் தந்தத்தாற் செய்யப்பட்ட ஊசி போன்ற ‘குச்சில்’ என்ற கருவி ஒன்று உண்டு.

மேல் அணைசுக்கும் கீழே சுமார் 4 அங்குல இடைவெளி விட்டு உடற்பாகத்தில் அங்குலத்திற்கு ஒன்றாக ஏழு துளைகள் வரியாக இடப்பட்டிருக்கும். இத்துளைகளின் மூலமே ஏழு சுரங்களும் எழுப்பப்படுகின்றன. இவற்றிற்குக் கீழே நான்கு அங்குலம் தள்ளி ஒரு துளையும், அதனை நடுவாகக் கொண்டு அதன் இரு பக்கங்களிலும் இரண்டிரண்டு துளைகளும் இருக்கும். கீழ் அணைசு கிண்ணம்போல் அடிப்பாகம் இருக்கும். சுமார் ஆறு அங்குல விட்டம் உள்ளதாக இருக்கும். இதன் வாய் விரிந்திருந்திருப்பதால் நாகசுர ஒலி வெகுதூரம் கேட்கும் என்கிறது

கலைக்களஞ்சியம். கீழே உள்ள 5 துளைகளும் பிரம்மத் துளைகள் என்றழைக்கப்படுகிறது. இவை காற்றுப் போக்கிகள். தேவைக் கேற்ப மெழுகு வைத்து அடைத்தும் திறந்தும் கொள்வார்கள்.

**ஒத்து:**

நாக்சுர வாத்தியத்திற்கு சுருதிவாத்தியமாக விளங்குவது 'ஒத்து'. நாகசுரத்தைப் போன்றே வடிவம் கொண்டது. ஆதார சுருதி ஒலியை அளிக்கும் இந்தக் கருவியை இசைப்பவர்கள் பிரத்யேக சாதகத்தால் ஆரம்பம் முதல் இறுதிவரை தொடர்ச்சியான ஒலியை எழுப்பி வருவார்கள். 'ஒத்து' இசைக்கும் சுருதியை ஆதார ஷட்ஜமமாகக் கொண்டே நாகசுரம் இசைக்கப்படுகிறது.

**நாகசுர வாசிப்பு முறை:**

நாகசுர உள்ளோசைகளை விரலடியாலும், நாகசுரத்தை உதட்டால் பிடிக்கும் பிடிப்புகளினாலும், நாவின் இயக்கங் களினாலும், நாக்கின் துத்தகார முறைகளினாலும் கமகங்களை எழுப்பலாம். வீணை, குழல், வாய்ப்பாட்டில் எழுப்பப்படும் கமகங்களை நாகசுரத்திலும் எழுப்பலாம். 'துத்துத்து - குருக்குருக் - கூக்குருக் - துகுத்துகுத் - தூத்துருத்' முதலிய துத்தகார ஒலிப்புக் களின் உதவியால் கமகங்களைக் காப்படுத்தி வாசிப்பார்கள்.

'ரத்திவாசிப்பு' என்ற முறையில் சுரக்கோப்புக்கள் மிக விரைவுக் காலத்தில் இரட்டித்தலும் அடுக்குதலும் பின்னுதலும் பெற்றுத் தனிச் சிறப்பு பெறுகின்றன என்கிறார் திரு. வி.ப.கா. சுந்தரம்.

ஏழு சுரங்களை மூன்று ஸ்தாயிகளிலும் வாசிப்பதற்கு ஏற்றவாறு வீணையில் மெட்டுக்களும் தந்திகளும் அமைந்திருக்கின்றன. அந்தந்த ஸ்தாயிக்குரிய சுரத்தானங்களில் விரலை வைத்து இசையை எழுப்பலாம். நாகசுரத்தின் அமைப்பு அவ்வாறில்லை. காற்றினை அழுத்தமாகவும், மென்மையாகவும் செலுத்துவதால் ஏழு துளைகளிலிருந்தே ஏழு சுரங்களும் இரண்டரை ஸ்தாயி வரையும் வாசிக்கப்படுகின்றன. உதட்டின் பிடிப்பால் அரைசுரம், கமகம் முதலியவை வாசிக்கப்பட்டு வருகின்றன.

நாகசுர வாத்தியத்தில் இசைக்கலையின் எல்லா அம்சங்களையும் கையாள முடியும். மனித உடலைப் போலும், புல்லாங்குழலைப் போலும், நாகசுர வாத்தியத்தில் மந்தரஸ்தாயி காந்தாரத்திலிருந்து தாரஸ்தாயி பஞ்சமம் வரை சுமார் 2 ஸ்தாயிகள் இசைக்க முடியும். மத்ய ஸ்தாயிக்கு என ஏற்பட்ட துளைகளைக் கொண்டே மந்தர

- தார ஸ்தாயி ஒலிகளை இசைக்க வேண்டி இருக்கிறது. மத்ய ஸ்தாயி ஷட்ஜ ஸ்தானத்திலேயே அழுத்தமாகக் காற்றைக் கொடுத்து தாரஸ்தாயி ஷட்ஜஸ்வரத்தை ஒலிக்க வேண்டும். இவ்வாறே ஸ்தாயி பேதங்களை நாகசுர வாத்தியத்தில் கையாளப்படுகிறது.

ராக ஆலாபனையை நாகஸ்வரத்தில் இசைக்கும்பொழுது, லய வாத்யமான தவுலைக் கையாளும் கலைஞர், ஆங்காங்கு சர்வலகு நடையை வாசித்து வருவதைக் கவனிக்கலாம். ராக ஆலாபனைக்கும் லயம் உண்டு.

## கோயில்களில் வாசிக்கும் முறைகள்

தினசரி வழிபாட்டில் இரவு நான்காம் சாமத்தில் துயிலெழுப்பும் பணியில் நாகசுரம் மூன்று மணி நேரம் வாசிக்கப்படுவது வழமை. பூபாளம், பௌளி, புறநீர்மை, கோபிகா, வசந்தம் இராகங்களுடன் பலவித துதிப்பாடல்களும் வாசிப்பது உண்டு. இதைத் தொடர்ந்து நடைபெறும் காலை வழிபாட்டின்போது பிலஹரி, கேதாரம், ஆரபி, தன்யாசி இராகங்களில் ஆளத்தியும் பாட்டுக்களும் வாசிக்கப்படும்.

நடுப்பகல் வழிபாட்டுக்கும் புறப்பாட்டுக்கும் ஸ்ரீராகம், சாவேரி மத்திமாவதி, மணிரங்கு, மோகனம் வாசிப்பது முறை சாயங்காலம் மங்கள ஆரத்திக்கு சங்கராபரணம், கல்யாணி, நாட்டைக்குறிஞ்சி ராகங்கள் இசைக்கப்படும்.

இரவு வழிபாட்டில் காம்போஜி, தோடி, பைரவி ராகங்கள் ஒலிக்கும். இரவுநேரப் புறப்பாட்டில் வடக்குப் பிரகாரத்திலிருந்து சன்னதி வரை, ஊஞ்சல், லாலி முதலிய பாடல்களைத் தொடர்ந்து பள்ளியறையை அடைந்ததும் நீலாம்பரியில் தாலாட்டு நடைபெறும்.

திருவீதி உலாவின்போது இசைக்கப்படும் இசை 'மல்லாரி'. இது கம்பீரநாட்டை இராகத்தில் பல தாளங்களில் அமைந்த இசை. இதற்கு சாகித்யம் கிடையாது. இது ஆண்டவனுக்கு மட்டுமே காணிக்கையாதலால் கோவில்களைத்தவிர வேறு இடங்களில் வாசிக்கப்படுதில்லை. நாகசுரத்தில் மட்டுமே 'மல்லாரி' இசைக்கப்படுகிறது. தேர் புறப்படும்போது தேர் மல்லாரியும்,

கோயிலுக்குத் தீர்த்தம் எடுத்து வரும்போது வாசிக்கும் மல்லாரிக்கு 'தீர்த்த மல்லாரி' என்றும் பெயர். இதுபோலவே சிவன் கோயில்களில் பிரம்மோற்சவத்தின் எட்டாம் நாளன்று 'ஓடகூரு' என்ற நாகசுரத்திற்கே உரிய இசை வாசிக்கப்படுகிறது.

**திருமணத்தின்போது வாசிக்கப்படுபவை:**

மாப்பிள்ளை அழைப்பின்போது அந்திமேளமான கல்யாணி, பூர்விகல்யாணி ராகத்தை இசைப்பார்கள். திருமண முகூர்த்த சடங்கிற்கு நாடகுறிஞ்சி ராகம் வாசிக்கப்படுவது மரபு. தாலி கட்டும் நேரத்தில் கெட்டி மேளமும், கட்டி முடிந்தவுடன் 'ஆனந்தம் பரமானந்தம்' வாசிக்கப்படுதலும் மரபாக இருக்கிறது. திருமண வீடுகளில் லாலி, ஊஞ்சல் போன்ற பாடல்களுக்கு ஏற்ப ஆனந்த பைரவியில் வாசிக்கப்படும்.

**நாட்டுப்புறக் கலைகளில் நாகசுரம்:**

நாட்டுப்புறக் கலைகளான நையாண்டி மேளம், குறவன் - குறத்தி ஆட்டம், பொய்க்கால் குதிரை போன்ற கலைநிகழ்ச்சிகளில் நாகசுரம், பம்பை, உடுக்கை, உறுமி மேளம் முதலியவற்றுடன் இணைந்து கிராம மக்களுக்கும் இன்பத்தை விளைவிக்கிறது. குறவன் குறத்தி - பொய்க்கால் குதிரையாட்டத்திலும் கதாநாயகன் பாடிய பாட்டை வாங்கிப் பாடும் பின்பாட்டுக்காரனாகவும் நாகசுரம் இசைக்கப்படு கிறது. கேலி கிண்டலுக்கு பொருத்தமான இணை இசயாகவும் விளங்கி வருகிறது. திமிரி நாகசுரம். காவடி எடுத்து ஆடும் கலைஞர்களுக்கு இணை இசையாக பழங்காலம் முதல் இன்றுவரை பயன்படுத்துகின்றனர் இறப்புச் சடங்கில் கூட நையாண்டி மேளத்துடன் வருகிறது. தமிழனின் பிறப்பு முதல் இறப்பு வரை வரும் இசைக்கருவிகளில் முதன்மையானதாக நாகசுரம் உள்ளதை அறியலாம்.

**கல் நாகசுரம்:** கல் நாகசுரங்கள் இன்று தமிழ்நாட்டில் மட்டுமே காணப்படுகின்றன. வாசிக்கப்படுவது இல்லை. கும்பகோணம் கும்பேஸ்வரர் கோயிலிலும், திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஆழ்வார் திருநகரியிலும் கண்காட்சிப் பொருளாக இருக்கிறது. இது ஒரு காலத்தில் இசைக்கப்பட்டதை தெரிவிக்கும் நிகழ்ச்சி ஒன்றை அறிஞர் பி.எம். சுந்தரம் குறிப்பிடுகிறார்:

''கும்பேசர் ஆலயத்திலுள்ள கருங்கல் நாகசுரத்தை வாசிக்க எவருமே முன்வந்திராபோது, சிவக்கொழுந்து பிள்ளை (1838 - 1911) தான் வாசிப்பதாக முன்வந்தார். அதற்கு சன்மானமாக இரண்டு மரக்கால் அளவுக்குப் பணமும், ஒரு யானையும் வேண்டும் என்பது அவருடைய நிபந்தனை. கொச்சி மன்னர் இதற்குச் சம்மதித்தபோது, அந்தக் கல் நாகசுரத்தைக் கொண்டு, சுமார் நாற்பத்தைந்து நிமிட நேரம் அற்புதமாக வாசித்து, மாபெரும் சாதனை நிகழ்த்தினார் சிவக்கொழுந்து பிள்ளை.'' என்று கூறப்படுகிறது.

**நாகசுரக் கல்லூரி:**

தமிழரின் இசைக்கருவியான நாகசுரத்தை பயில வேண்டு மானால் குருகுலவாச முறையிலேயே பயில வேண்டி இருந்தது. இதனால் பிறரும் வந்து கற்கும் முறை வளராமல் இருந்தது. ஆசிரியர் யார் என்று தேடுவதும் சிரமமாக இருந்தது. இதையெல்லாம் கண்ட நாகசுர வித்வான்கள், நாகசுரத்திற்கென்று கல்லூரி வேண்டும் என்ற கோரிக்கையை முன் வைத்தனர். இதையடுத்து, திருப்பாம்புரம் நடராஜ சுந்தரம் பிள்ளை மகன் திரு. சோமசுந்தரம் அவர்களின முன் முயற்சியினால் 1956 ஆம் ஆண்டு சுவாமிமலையில் நாகசுரக் கல்லூரி தோற்றுவிக்கப்பட்டது. சரியான வசதியின்மையால் அல்லல்பட்டது. 1958 ஆம் ஆண்டு இக்கல்லூரி பழநி மலைக்கு மாற்றப்பட்டது. அதன்பின் பழநி கோயில் நிர்வாகத்தில் இயங்கி வருகிறது. இதையடுத்தே அண்ணாமலைப் பல்கலைக்கழகம், தமிழ்நாடு அரசு இசைக்கல்லூரி முதலியவற்றில் நாகசுரம் பயிற்றுவிக்கப்படுகிறது.



இளம் வயதில் டி.என்.ஆர்.

## தமிழ் இலக்கியங்கள் காட்டும் நாகசுரம்

சங்ககால 'கூத்தநூல்' சாத்தனார் என்பவரால் இயற்றப்பட்டது. இந்நூலில் ஒன்பது வகையான 'வங்கி'யங்கள் கூறப்படுகிறது. அவற்றில் 'நாகவங்கியம்' என்ற பெயரும் காணப்படுகிறது. இது நாகசுரமாக இருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

காளமேகப் புலவரின் பாடலில் குழலையும் வங்கியத்தையும் தனித்தனியே பிரித்துக் கூறுவதால் வங்கியமே 'நாகசுரம்' என்ற கருத்து உறுதிப்படுகிறது.

கி.பி. 14 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவரான அருணகிரிநாதர் திருப்புகழிலே தவில் வாத்யம் 12 முறைகள் வந்துள்ளது. மகாபரத சூடாமணி, இரத்தினகிரி உலா போன்ற நூற்களில் தவிலும், நாகசுரம் பற்றிய குறிப்பு உண்டு. கி.பி. 16 ம் நூற்றாண்டளவில் யாழ்ப்பாணத் தமிழரசில் முத்துராஜரால் எழுதப்பட்ட 'கைலாயமாலை' எனும் நூலிலே நல்லூரில் நிறுவப்பட்ட கைலாசநாதர் ஆலயத்தில் நடைபெற்ற திருக்குடமுழுக்குப் பற்றிய விவரணம் உண்டு. இத்தகைய விவரணம் வேறொரு நூலிலும் இல்லை. இங்கு நடைபெற்ற வைபவத்தின்போது இடம்பெற்ற இசை வாத்தியங்களிலே ''சல்லரி, பொற்பேரி, தவில் முரசு, தண்ணுமை'' முதலியன கூறப்பட்டுள்ளன.

''தாரை, கவுரி, தவண்டை துடி நாகசுரம்''

-என்று கூளப்ப நாயக்கன் காதல் (282) பிரபந்தம் ஓரிடத்தில் குறிப்பிடுகிறது.

மாம்பழக் கவிச்சிங்க நாவலர் பிரபந்தங்களில் நாகசுரம் 'நாகசின்னம்' என்றே குறிப்பிடப்படுகிறது. தேவராஜ சுவாமிகள் எழுதிய 'கந்தஷஷ்டி கவசம் குன்றுதோறாடல் பகுதியில்,

''உருத்திர வீணை நாகசுரமேளம் தித்திமி என்று
தேவர்களாட சங்கீத
மேளம் தாளம் துலங்க மங்களமாக வைபவம் இலங்க''

என்று குறிப்பிடப்படுகிறது.

துளைக்கருவிகளுக்கு இலக்கணம் வகுக்கும் பரத சங்கிரகம் குறிப்பிடும் கருவிகளான,

''பூரிகை நாகசுரம் பொற்சின்னம் எக்காளை
தாரை நவரி சங்கு வாய்வீணை - வீரியஞ்சேர்
கொம்புதித்தி காளைகுழலுடன் ஈராறும்
இன்பார் துளைக் கருவியென்''

-என பட்டியல் போடுவதில் 'நாகசுரம்' இடம் பெறுகிறது.

மங்கள வாத்யங்கள் எவை என்று கேட்கும்போது மகாபரத சூடாமணி ஒரு பட்டியலை காட்டுகிறது. அது வருமாறு:

''முகவீணை நாகசுர மொழிபாம்பு நாதசுரந்
தகுசங்கு குழன் முதலாய் சாற்றுஞ் சுகமிகவே
தங்கு மிவ்வாத்தியத்திற் காய்ந்திட்டார் நூல்வல்லோர்
மங்கள வாத்தியமெனு நாமம் (855)''

என்று குறிப்பிடுகிறது. மேலும் வேறு செய்யுட்களிலும் நாதசுரம் என்னும் பதம் வந்துள்ளது. நாசுரம் பற்றிய பல்வேறு விபரங்களும் தொடர்ந்து 856 - 875 வரை விவரிக்கப்பட்டுள்ளன. நாகசுரம் தெய்வீகத் தன்மையுள்ளதென்றும் இதில் அழுத்திக் கூறப்பட்டுள் ளது. எ - கா.

''பாரப்பா நாதசுரமென்ற தாளம் பாகங்கான
சிவனென்று பகருவார்கள்

நேரப்பா சுருதியிது சத்தியாகும்'' (840) என்று தெரிவிக்கிறது. நாதசுரம் என்ற தாளம் (இசை) சிவமே என்றும் இதன் சக்தி சுருதி என்று சொல்கிறார் மகாபரத சூடாமணியார்.

கர்நாடக சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துசாமி தீக்ஷிதர் ஸ்ரீராகத்தில் இயற்றியுள்ள 'ஸ்ரீ தியாகராஜ மஹாத்வஜாரோஹா' என்ற கீர்த்தனையில்

''ஆகம சித்தாந்த ப்ரதிபாத்யம்
ஆனந்த சந்த்ர சேகர வேத்யம்
நாகஸ்வர மத்தலாதி வாத்யம்
நாமரூப அதீதம் அனாத்யம்''

என்று குறிப்பட்டு சிறப்பிக்கிறார்.

நாளு தேதி நட்சத்திரம்
நல்லாப் பார்த்துக் குறிச்சுவச்சு
நாகசுரக்காரரையும் - கண்ணுமச்சானே
நயந்து அழைக்கணுமாம் பொன்னுமச்சானே

என்று நாட்டுப்புறப் பாடலும் உரைக்கிறது. (மலையருவி பக்.94)

**வடமொழி இலக்கியங்களில் நாகசுரம்:**

வடமொழியிலுள்ள பெரிய சங்கீத சாஸ்திர நூலான சங்கீத ரத்னாகரம்(கி.பி.13 ஆம் நூற்றாண்டு); பார்ஸ்வ தேவருடைய சங்கீத சமயசாரம்; சைவக் கோவிலமைப்பு கிரியைகள் முதலியவற்றை விவரிக்கும் காமிகாமகம் போன்றவற்றில் 'முகவீணை' பேசப்பட்டுள்ளது.

அஹோபிலரின் 'சங்கீத பாரிஜாதம்' என்ற இசை இலக்கண நூலில் 'நாகஸ்வரம்' என்ற பதம் வந்துள்ளது. வடமொழியிலுள்ள ஸ்கந்தப்புராணம்' மற்றும் சங்கர சம்ஹிதையிலுள்ள சிவரகஸ்ய காண்டத்தினைச் சேர்ந்த சம்பவ காண்டத்திலே வரும் இசை வாத்தியப் பெயர்ப் பட்டியலிலே நாகஸ்வரம் எனும் பதமே வந்துள்ளது. கௌன்டின்ய ஸ்ரீநிவாசகவி எழுதியுள்ள 'ஸ்ரீரங்கராஜசரிதபாண' எனும் வடமொழி நாடகத்திலே பாம்பாட்டியொருவர் நாகசாரம் (நாகசுரம்) வாசிக்க, பாம்பு படமெடுத்து ஆடும் காட்சி வருணிக்கப்பட்டுள்ளது. அதாவது,

''உத்யன் நாகசார சுருதி சுருதி சுகாத்
உந்நம்ர போகபாணி'' - என்பதாகும்.

**கன்னடமொழியில் உள்ள வழக்கு:**

கன்னட மொழியில் 'நாகஸ்வரம்' எனும் பதமே வழக்கிலிருந்து வந்ததாகத் தெரிகிறது. ''நாகஸ்வரம் வாசிக்கப்படும்போது மான் ஆடுமா? எனும் பழமொழி வழக்கில் உள்ளது. இதுதவிர கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் எழுந்த மங்கரஸரின் 'மங்காபிதானம்' எனும் கன்னடமொழி நிகண்டு நாகஸ்வரம் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. இதுபோலவே கன்னட வசன காவியங்களிலும் இச்சொல் இடம் பெற்றுள்ளது.

**தெலுங்கு மொழியில் நாகசுரம்:**

ஸ்ரீநாத என்பவர் தெலுங்கு மொழியில் எழுதியுள்ள 'கிரீடாயிராமம்' (கி.பி.1400) எனும் நூலிலும் 'நாகஸ்வரம்' எனும் பதம் இருமுறை வந்துள்ளது. விஜய நகரப் பேரரசரான கிருஷ்ண தேவராயரின் ஆட்சிக் காலத்திலே (கி.பி.16 ஆம் நூ. முற்பகுதி) வாழ்ந்த ஹரிட்டர் என்பவர் தெலுங்கு மொழியில் எழுதியுள்ள 'நரசிம்ம புராணம்' மூன்றாம் சர்க்கத்திலுள்ள நீண்ட இசைவாத்தியப் பட்டியலில் 'நாகசாரம்' எனும் பெயர் வந்துள்ளது. கிருஷ்ண தேவராயரின் 'ஆமுக்த மால்யதா' எனும் காவியத்தில் 'நாகஸ்வர குழு' பற்றிய குறிப்பு உண்டு.

**கல்வெட்டிலும், ஓலையிலும் நாகசுரமும், மேளக்காரர்களும்:**

எம்பெருமா நடியார்க்கு பணம் 2
டொல நாகசர காராற்கு பணம் 2

- என கல்வெட்டு TDI II No.135 கூறுகிறது. மேலும், விஜயநகர மன்னனான சதாசிவராயன் காலத்தைச் சேர்ந்த (கி.பி.1550 ஆம் ஆண்டு) கல்வெட்டொன்றிலே திருமலை நாயுடு என்பவன் தட்பாத்ரி தாலுக்காவிலுள்ள நிட்டூரு கிராமத்திலே நீலகண்டனின் கோவிலின் முன்னுள்ள சென்னகேசவராய எனும் தெய்வத்திற்கு வழங்கப்பட்ட நன்கொடை பற்றிக் கூறப்பட்டுள்ளது. இக்கொடை 6 நடனக் காரிகளுக்கும், பாகவதம் படிப்பவருக்கும், நாகஸ்வர வித்வான் களுக்கும் வழங்கப்பட்டது. இவர்கள் இக்கோவிலில் சேவையில் அமர்த்தப்பட்டனர்.

சதாசிவராயன் காலத்திய தேவலபுரக் கல்வெட்டொன்றிலே அங்குள்ள வசந்தமல்லிகார்ஜுன கோவிலிலே இரு நாகஸ்வரங் களும், இரு தவில்களும் வாசிப்பதற்கு ஒரு நாகஸ்வரக் கலைஞருக்கு வழங்கப்பட்ட நன்கொடைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இங்கு குறிப்பட்ட கலைஞர் இவ்வாத்தியக் குழுவின் தலைவராயிருந் திருப்பார் எனலாம். கி.பி.1554 ஆம் ஆண்டினைச் சேர்ந்த திருப்பதிக் கல்வெட்டொன்றிலும் இரு நாகஸ்வர வித்வான்கள் திருவேங்கடப் பனால் நன்கொடை வழங்கி நியமிக்கப்பட்டதாக அறியப்படுகிறது.

மைசூர் மாநிலத்திலுள்ள கி.பி.1632 ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றின்படி ஒரு கோவிலின் சேவைக்கு அமர்த்தப் பட்ட நால்வரில், ஒரு தொலுகாரரும், (தவில்காரரும்) ஒரு நாகஸ்வர வித்வானும் அடங்குவர். இவர்களின் ஊழியத்திற்காக நிலமானியம் வழங்கப்பட்டதை அக்கல்வெட்டு தெரிவிக்கிறது.

**ஓலை கூறும் செய்தி:**

''வெற்றி முரசும் க்ஷீணவீரபத்திர மல்லாரி முதலிய
மேளங்களும் சேவிப்பிச்சு''

- என்று பத்மநாதபுரம் ஓலை ஆவணம் தெரிவிக்கிறது.

### செப்பேடுகளில் நாகசுரமும் நாகபாசத்தாரும்:

1. திருமுருகன்பூண்டிச் செப்பேட்டில் நாகசுரம் இசைப்போரை 'நாசபாசத்தார்' என்று குறிப்பிடுகிறது. அது வருமாறு:

''நாக பாசத்தாரில் சிவக்கொழந்தை நட்டுவன்; மத்தளம் வீரப்பன், காளியண்ணன்; சங்கீதம் முத்துக்கருப்பன், தாநப்பன், நாகசுரம் நல்லையன், பொன்னையன், தவுல் குப்பன், நாராயணன்; தாசிகள் முத்துரத்தி, பாடகத்தி, வள்ளி முத்து

- என்று குறிப்பிட்டுக் கொண்டு போகிறது.

### 2. கும்பகோணம் நாகேசுவர சுவாமி கோயில் செப்பேடு:

இச் செப்பேட்டின் காலம் 5.4.1734. இச்செப்பேடு இக்கோயிலிலே இருக்கிறது. ஒரு பக்கம் செய்தியும், ஒருபக்கம் அக்காலத்தில் இருந்த 40 க்கும் மேற்பட்ட பல்வேறு இசைக்கருவிகள் எழிலுடன் வடிக்கப்பட்டுள்ளன. அவற்றில் நாகசுரமும் ஒன்று.

மன்னர் துக்கோஜி காலத்தில் கும்பகோணம் சிவன் கோயில், திருமால் கோயில் 'நாகபாசத்தார்' அனைவரும் தரும மடம் ஒன்றை உருவாக்க நினைத்துத் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி சமஸ்தானப் பகுதியில் உள்ள நாகபாசத்தார் அனைவரையும் அழைத்துக் கும்பகோணத்தில் உள்ள நாகேசுவரன் கோயில் வடக்கு வீதி தெற்குப் பக்கம் மருளைய மடத்துக்கும், பந்தல்கார ரங்கன் மனைக்கும் இடையில் நிலத்தை வாங்கி மடம் கட்டி அந்த மடத்தைக் காவேரி பண்டாரம் என்பவருக்கு கொடையாக அளித்த செய்தியைக் குறிப்பிடும் இடத்தில்,

''பெருமக்கள் வீடுகளிலும் மடங்களிலும் பிற இடங்களிலும் தொழில் செய்யும் நாகபாசத்தார் சோடி 1 க்கு 2 பணமும்'' என்று வரும் பகுதியில் இசை வெள்ளாளர் 'நாகபாசத்தார்' என்ற சொல்லால் குறிக்கப்படுவதை அறியலாம்.

### தமிழக ஓவியங்களில் நாகசுரம்:

தமிழ்நாட்டில் உள்ள கோவில்களில் பல்வேறு அரசர்களின் காலங்களில் வரையப்பட்ட ஓவியங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு அரசருக்குப் பின்வரும் அரசர்கள் காலத்தில் பழையவற்றை அழித்து அதன்மேல் புதிய ஓவியங்கள் எழுதும் வழக்கம் இருந்ததை தஞ்சை பெருவுடையார் கோவிலில் சோழர், நாயக்கர், மராட்டிய ஓவியங்கள் ஒன்றன்மேல் ஒன்றாக படிந்திருப்பதை பார்க்கும்போது

உணர்ந்து கொள்கிறோம். தமிழகத்தில் இன்று நாம் பார்க்கக் கிடைக்கும் ஓவியங்கள் அனைத்தும் நாயக்கர்கால ஓவியங்களே எஞ்சியுள்ளன. சோழர், பல்லவர், பாண்டியர் கால ஓவியங்கள் பெருமளவு அழிந்தே போய்விட்டன. அதனால் அவற்றில் நமக்கான இசைக்கருவி ஓவியங்கள் கிடைக்கவில்லை.

நாயக்கர் காலத்தில் வரையப்பட்ட ஓவியங்கள் குடந்தை இராமசாமி கோவில், திருவலஞ்சுழி, திருவாரூர், சிதம்பரம் முதலிய ஊர்களில் உள்ள ஓவியங்களில் நாகசுரம் வாசிக்கும் காட்சியைக் காண முடிகிறது. திருவாரூர் கோயிலில் உள்ள ஓர் ஓவியத்தில் அக்கால நாடகசாலை எப்படி இருந்தது என்பதைக் காட்டும் காட்சி ஒன்றுள்ளது. அதில் நட்டுவனார் ஜதி சொல்ல ஆடல்மகள் ஆடுகிறாள். நட்டுவனாருக்குப் பின் தண்ணுமை இசைப்போர், நாகசுரம் இசைப்போர், திருச்சின்னம் வாசிக்கும் கலைஞர்கள் நின்றுகொண்டிருக்கும் ஓவியம் சிறப்பானது.

இதுபோலவே குடந்தைக்கருகிலுள்ள ஓர் ஊரில் உள்ள ஓவியம் 19 ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் வரையப்பட்டது. அவ்வோவியத்தில் நாகசுரக் குழுவினர் வாசித்துக்கொண்டு நிற்கும் காட்சி புகைப்படம் போல உள்ளது. தவில் கலைஞர் குடுமி அவிழ தவில் தட்டும் காட்சி அற்புதமாக வரையப்பட்டுள்ளது. அத்தவில் கலைஞரே புகழ்பெற்ற அம்மாப்பேட்டை பக்கிரிப் பிள்ளை என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

**சிற்பங்களில் நாகசுரம்:**

தஞ்சைப் பெரிய கோவிலில் நாகசுரக் கருவியை பூதகணங்கள் வாசிப்பது போன்ற சிற்பங்கள் காணப்படுகின்றன. இதற்கடுத்து சிதம்பரம் நடராசர் கோவிலில் உள்ள நாயக்கர்கால சிற்பங்களில் பல காட்சிகள் சித்தரிக்கப்பட்டுள்ளன. நாயக்கர்கள் சோழர், பாண்டியர்களுக்கடுத்து தமிழகத்தை ஆண்டதாலும், சோழப் பேரரசு அக்காலத்தில் தென்னாசியா முழுவதும் அதன் புகழ் பரவியிருந்ததாலும் சோழர்காலக் கலையின் பாதிப்புகள், பாணிகள் நாயக்கர் காலத்திலும் கடைப்பிடிக்கப்பட்டுள்ளதை சிதம்பரம் கோயிலில் உள்ள பல சிற்பங்கள் உணர்த்துகின்றன. இங்கு நாகசுரம் வாசிக்கும் சிற்பக் காட்சிகள் மூன்று இருக்கின்றன. ஒன்றில்



சிதம்பரம் நடராசர் கோயில் உள் திருச்சுற்று ஆடல் மகளிர் சிற்ப நிரலில் திமிரி நாகசுரமாகக் கொள்ளத்தக்க காற்றுக் கருவியிசைக்குக் குமிழ்த் தாளம் பக்க இசையாக அமையும் காட்சி.



சிதம்பரம் நடராசர் கோயில் உள் திருச்சுற்று ஆடல் மகளிர் சிற்ப நிரலில்
திமிரி நாகசுரக் கருவிகளாக கொள்ளத்தக்க காற்றிசைக் கருவிகள் இணைந்து
இசைக்கும் காட்சி இவற்றில் ஒன்று ஒத்துக் கருவியாக இருக்கலாம்.



சிதம்பரம் நடராசர் கோயில் உள் திருச்சுற்று ஆடல் மகளிர் சிற்ப நிரலில் மத்தளத்தோடு இணைந்து ஆடலுக்கு இசை வழங்கும் ஊது கருவி. இது முகவீணையாக இருக்கலாம்.

திமிரி நாகசுரம் வாசிக்கத் தாளம் போடும் சிற்பம்; மற்றொன்று நாகசுரம் வாசிக்க மத்தளம் இசைக்கும் காட்சி; அடுத்தது இரட்டை நாகசுரம் வாசிக்கும் காட்சி. இரட்டையாக தெரியும் அக்காட்சியில் ஒன்று ஒத்து என்று தெரிகிறது. பழங்காலத்திலிருந்தே நாகசுரத்துக்கு சுருதியாக ஒத்து இருப்பதை அறிய முடிகிறது. அக்கால நாகசுரம் குறைந்த உயரத்துடன் உள்ள திமிரிவகை நாகசுரம் என்பதையும் சிற்பங்கள் உணர்த்துகின்றன. நாகசுரக்காரர் சகலவிதமான ஜோடனைகளுடன் இருக்கும் காட்சி இசைக் கலைஞர்களுக்கு பெரும் மதிப்பு இருந்ததைத் தெரியப்படுத்துகிறது. மேலும் நாகசுரக்காரரின் பெரிய மீசையும், கொண்டையும் அழகாக வடிக்கப்பட்டுள்ளது.

## முகவீணைக்கு லக்ஷணம்

கருங்காலி செங்காலி மூங்கில் கஞ்சங்கன
சிறுவிரல் பருமை காண நீளம்
வருங்காலே அங்குலமே யொன்பதாகும்
வருந்துளையு மொன்பது தோன்றில் வாயுவொட்டரு
சுருங்காப் பயறளவு துவாரம் சி(இ)வை துலங்கிய
தாரங்க மடியில் சொல்லில் செய்து
வருங்காலே சுருதி பெற சந்திர
சூரியவர் சித்தமுக வீணை வாங்கிஷந்தானே.

- என்றது. கருங்காலி, செம்மரம், மூங்கில், வெண்கலம் இதில் சிறுவிரல் பருமையாக ஒன்பது அங்குல நீளமாகவும், முத்திறயாக் கட்சியில் விடுதுவாரமும், அடியில் தாரகம் ஒன்பது துவாரமும், (துதாரமும்) நடுவே ஏழு துவாரமும் ஆக ஒன்பது துவாரத்திற்கும் ரேகை பயறளவு பிரமாணமுமாய், நுனியில் ஓர் அங்கும் குமிழை உடையதாய் ஜீவாஷெ (சீவாளி) யுடனே வாசிக்கப்பட்டது முகவீணை.

*- பரதசித்தாந்தம்*

# நாதசுர லட்சணம்

216. இருக்கு வேதத்தின் முன்னின் றெழுந்ததோர் நாதசுரந்தான்
அருக்க னாமணஞ் செய்யும் அட்ட மட்டமாஞ் சூழச்
சருக்கமாஞ் சில்லே சேர்மன் தோன்றிய புல்லே சத்தி
பெருக்க மா்றுளவே என்பன் சின்னம் பிரமந் தானே.

217. வேதியன் பிரமன் தானும் மிகுந்ததோர் கண்டை யாகும்
சோதியே நாதமாகும் துழையதே சத்தி தேவி
ஆதியே முருகன் முன்னா மாய்ந்ததோர் சுரங்கள் தேவர்
சாதிமே லணமே யென்னத் தயங்கும் இந்திரனே யாகும்.

218. சட்டி சங்கனிடன் பிரமாணி தங்கிய நாரியாகும்
ரிட்ட சுமனா மிகையில் இயன்ற இந்திராணி யோடுன்னும்
இட்டமா மார்கஞ் தாரமே இலகு மத்திமை வயிரவியாம்
கட்ட விமைத்திமங் கருதிய தற்கணி வாராகியாணம்

219. குடக்கா னாமிகையும் பஞ்ச கவுமாரி யென்று மேத்தும்
தொடுத்த மத்திமத்தியில் தெய்வம் யேசொரி நலமே யாணர்
மடுத்த தற்சணி திசார மணியுட னமர்காளி யாகும்
எடுத்தனர்க் குள்ளும் கீதம் இயம்பின ரசனந் தானே.

220. துதித்ததால் வேத நாத சுரமிரு புறத்தின் துளைகளை
விதித்தனன் பிரமன் மேக வண்ணணாங் கண்ணனூதப்
பதித்த பூபாள ராகம் பயிரவி பதுமத் தன்னில்
உதித்ததே புருடன் வெள்ளை யெனவே ஓதினாரே.

221. அரனு மையதி செயித்த வரிய மாலன்மி னோடும்
பரிபுர பாதங் கூட்டிப் பங்கயக் கரத்தினாலே
விரிவுறு நாத சுரத்தில் விளங்கிய சுரங்க ளேழும்
மருவித மாகக் கான மருளினன் மாலோன் தானே

222. கதித்தன் னனுட்டன் முன்னா மங்களின் தானங்க ளேழில்
உதித்தனன் மாது வேளா கிரிமல கிரிபவு ளியெனத்
துதித்தனன் நீதமா யொன்று துலங்கிய ஈசன் முன்னே
விதித்தனன் பிரமன் தானும் விளங்கிய வேதங் கண்டே

223. ஒத்து நாதசுரம் மேகமா வண்ண னுதவிமேல் சுரமதனுக்
கொத்து யேகமாமாதி சச்சரி யிறையங் கையினில்
வைத்துத் தெய்வமாக மாமலரோன் கையிலழகுடனெடுத்து
சத்துவ பாகமாய் நின்று சத்தி பரிவுடனோ தலுற்றாள்.

- வாத்திய மரபு

# டி.என். இராஜரத்தினம் பிள்ளை வரலாறு

**தோற்றம்:**

27.8.1898 ஆம் ஆண்டு (ஆவணி மாதம் 10 ந் தேதி) திருமருகலில் குப்புசாமி பிள்ளை - கோவிந்தம்மாள் தம்பதிகளுக்கு மகனாகப் பிறந்தார். இவருக்கு தயாளம்மாள் என்ற தமக்கையும் உண்டு. பெற்றோர் குழந்தைக்கு 'பாலசுப்பிரமணியம்' என்ற பெயரை இட்டனர்.

குப்புசாமி நாயனக்காரர், மகன் பிறந்த சில மாதங்களுக் குள்ளாகவே இயற்கை எய்தினார். தாய்வழிப் பாட்டனான சிவராமப் பிள்ளையே காப்பாளராக இருந்தார். தாய்மாமன்தான் திருமருகல் நடேசபிள்ளை. திருவாவடுதுறை ஆதீன மடத்து வித்வான். இவர் புல்லாங்குழல் மேதை சரபசாஸ்திரியோடு போட்டிபோட்டு அவர் வாசித்த, காம்போதிராகப் பாடலை, அப்படியே புல்லாங்குழல் பாணியிலே வாசித்து, எல்லோராலும் பாராட்டப் பட்டவர். இந்த போட்டி, செட்டிநாட்டிலுள்ள கோனாபட்டு என்ற ஊரில் நடந்தது.

**பாலசுப்பிரமணியம் - இராஜரத்தினமான கதை**

பாலசுப்பிரமணியம் தந்தையார் காலமான பின்னர் தாய்மாமன் வீட்டிலேயே வளர்ந்து வந்தார். நடேச பிள்ளைக்கு குழந்தை பாக்கியம் இல்லாமல் இருந்தது. அப்போது ஒருநாள், திருவாவடுதுறை மடத்திற்கு நாகசுரம் வாசிக்க வந்தார் புகழ்பெற்ற நாகசுர மேதையான மன்னார்குடி பக்கிரியா பிள்ளை. திருமருகலார் வீட்டிற்கு வந்தபோது பாலசுப்பிரமணியம் நடேசபிள்ளையின் மடியில் விளையாடிக் கொண்டிருந்திருக்கிறார். இதைக்கண்ட பக்கிரியாபிள்ளை "யார் இந்தக் குழந்தை? குழந்தையின் காதுகள் யானையின் காதுமடல் போல பெரியதாக இருப்பதால் இவன் சிம்ம லக்னகாரனாக இருப்பான்" என்றாராம். அதற்கு திருமருகலார், "இவன் என் தமக்கையின் மகன். இவன் சிம்மலக்னக்காரன்தான். இரண்டு தடவை மணம் செய்தும் எனக்கு புத்திரப் பாக்கியம்

இல்லாததால், என் சொத்து முழுவதையும் இவனுக்குத்தான் எழுதி வைக்கப்போகிறேன் என்றாராம். அதற்கு பக்கிரியாபிள்ளை, 'உம்ம சொத்து மட்டும் இல்லை, உங்களின் சங்கீதத்திற்கும் இவன்தான் இனி வாரிசு!'' என்றாராம்.

1902 ஆம் ஆண்டு பாலசுப்பிரமணியத்தை திருமருகலார் தம்மகனாக தத்தெடுத்துக் கொண்டார். இதன் காரணமாகவே பாலசுப்பிரமணியன் என்ற பெயர் மாற்றம் பெற்று 'ராஜரத்தினம்' ஆனார். தன் தந்தையின் பெய்ரான முன்னெழுத்தை போடாமல் சுவீகாரம் சென்ற திருமருகல் நடேசனாரின் முன்னெழுத்தையே டி.என். என்று போட்டு டி.என். ராஜரத்தினம் பிள்ளையானார். 1903 ஆம் ஆண்டு திடீரென்று ஏற்பட்ட மாரடைப்பு காரணமாக திருமருகல் நடேசபிள்ளை காலமானார். தாய் மாமன் காலமான போது இராஜரத்தினத்திற்கு வயது ஐந்துதான்.

திருமருகலார் இறந்ததும் குடும்பப் பொறுப்பும், இராஜரத்தினத்தையும் கவனிக்கும் பொறுப்பில் இருந்தவர், திருவாவடுதுறை மடத்துப் பொறுப்பதிகாரியான (ராயசம்) பொன்னுப்பிள்ளை ஆவர். 'ராயசம்' என்ற சொல் நாயக்கர் காலத்திலிருந்து வழக்கிற்கு வந்தது. பொன்னுப்பிள்ளை திருமருகலாரின் இன்னொரு தங்கையான கமலாம்பாளை திருமணம் செய்தவர். அதனால் இராஜரத்தினத்திற்கு ஒரு முறையில் சிற்றப்பா ஆவார்.

**இசைப்பயிற்சி:**

நடேசபிள்ளை இருக்கும்போதே, கதிரேசம்பிள்ளை என்ற நாகசுர வித்வானிடம் பாட்டுக் கற்றுக்கொள்ள இராஜரத்தினத்தை யும், தயாளம்மாளையும் அனுப்பி வைத்தார். இசைப்பயிற்சி தொடர்ந்து நடந்தது. இராஜரத்தினத்திற்கு கற்பூர மூளை, எது கற்றுக் கொடுத்தாலும் உடனே பிடித்துக் கொண்டது. ஒருமுறை ஆசிரியர் அவர் இல்லாத நேரத்தில் சஹானா வர்ணத்தை தயாளுவுக்குச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தாராம், இறுதி நேரத்தில் வந்த இராஜரத்தினம் ஒரே முறை கேட்டு விட்டு திரும்ப முழுவதையும் பாடிக் காட்டியதைக் கண்ட இசையாசிரியர் வியப்படைந்தாராம்.

அடிப்படை பயிற்சி முடிந்த பின்னர், மேற்கொண்டு இசை பயில, திருக்கோட்டிக்காவல் கிருஷ்ணய்யரிடம், பொன்னுப் பிள்ளை அனுப்பியிருக்கிறார். கிருஷ்ணய்யர், அக்காலத்தில்

புகழ்பெற்ற வயலின் இசை மேதையாகத் திகழ்ந்தவர். (இவர், செம்மங்குடி சீனுவாசய்யரின் தாய் மாமன்.) இசை பயிலுவதற்காக திருவாவடுதுறையிலிருந்து திருககோட்டிக்காவலுக்கு கால்நடையாகவே இராஜரத்தினம் சென்று கற்றிருக்கிறார்.

இசை பயின்ற காலத்தில் நேர்ந்த ஒரு நிகழ்ச்சியை இராஜரத்தினமே கூறுகிறார்: "ஒருநாள் பியாகடை வர்ணம் பாடிக்கிட்டு இருந்தேன். ஐயா பிடிலிலே என்கூட வாசிச்சுக்கிட்டு இருந்தாங்க. கமகம் கவனமே இல்லாமே சொரங்களைக் கொம்பு கொம்பாய் பாடிக்கிட்டிருந்தேன். அவங்களுக்குக் கோபம் பிச்சுக்கிடடது. வில்லாலே என் மூக்கு மேலே ஒரு குத்துக் குத்தினாரு. ரத்தம் பிச்சுக்கிட்டது. அதிலேயிருந்து கனவுலே கூட மொட்டை சொரம் (சுரம்) பேசறதில்லை. வாய்ப்பாட்டிலுந் தான்...."



திருக்கோடிக்காவல் கிருஷ்ணய்யர்

கிருஷ்ணய்யரிடம் 2 ஆண்டுகள் கற்ற பின்னர், இசைப்பயிற்சி முடிந்தது. மேலும் கோனேரிராஜபுரம் வைத்யநாத அய்யர், வீணை தனம்மாள் ஆகியோரிடமும் வாய்ப்பாட்டு கற்றிருக்கிறார்.

**அரங்கேற்றம்:**

ஒருநாள் திருவாவடுதுறை மடத்திற்கு ஒரு பெரும் இசைக் கலைஞர் கச்சேரி செய்ய வந்தார். கச்சேரியும் முடிந்தது. இராஜரத்தினம் கச்சேரி நடந்த இடத்திலேயே உட்கார்ந்துகொண்டு எழுந்திருக்க மறுத்துவிட்டானாம். நானும் கச்சேரி செய்யணும் என்று அடம் பிடித்தாராம். பிறகு அவன் விருப்பப்படியே ஒருநாள் மாலை அரங்கேற்றம் நடந்தது. அப்போது அவனுக்கு வயது பத்து. இராஜரத்தினத்தின் முதல் பாட்டுக் கச்சேரி நன்னிலத்தில் நடைபெற்றது. பிறகு மாயூரம், திருவழுந்தூர், காஞ்சிபுரம் முதலிய இடங்களில் தன் தமக்கையுடன் கச்சேரி செய்திருக்கிறான். சகோதரி வராத நாட்களில் திருப்பாம்புரம் சாமிநாதனுடன் கச்சேரி செய்திருக்கிறான். இந்த சாமிநாதன்தான் பிற்காலத்தில் புகழ்பெற்ற புல்லாங்குழல் கலைஞராகவும், சென்னை இசைக்கல்லூரிக்கு முதல்வராகவும் இருந்தவர்.

இராஜரத்தினம் செய்த கச்சேரிகளுக்கு பல மூத்த மிருதங்கக் கலைஞர்கள் வாசித்திருக்கின்றனர். தஞ்சாவூர் பக்கிரி, கோயில் பிள்ளை, குற்றாலம் குப்புசாமி பிள்ளை முதலியோரைத் தவிர 'தாளசமுத்திரம்' என்று போற்றப்பட்ட கும்பகோணம் அழகநம்பிப் பிள்ளையே சில கச்சேரிகளுக்கு வாசித்து இராஜரத்தினத்திற்கு பெருமை சேர்த்திருக்கிறார்.

இராஜரத்தினம் வீட்டிலிருக்கும் நேரங்களில் இருத்தி வைத்துக்கொண்டு பொன்னுப்பிள்ளை வர்ணங்களையும், கீர்த்தனைகஎ ரயும் வாயாலே சீட்டியடித்துச் சொல்லிக் கொடுப்பாராம். இப்படித்தான் திருமருகலாரின் இசை நுணுக்கங்களை பொன்னுப்பிள்ளையிடம் கற்றதாக பிற்காலத்தில் டி.என்.ஆர். தெரிவித்திருக்கிறார்.

ஒருநாள் இராஜரத்தினத்தை மடத்திற்கு அழைத்துச் சென்று ஆதீனம் முன்பு பாடும்படி பணித்திருக்கிறார் பொன்னுப்பிள்ளை. மடாதிபதி இராஜரத்தினத்தின் இசையைக் கேட்டுவிட்டு சொன்னாராம், ''நடேசபிள்ளையின் சுவீகாரப் புத்திரன் இன்னும் நாகசுர வித்வானாகாமல் இருக்கலாமா?'' என்றதைக் கேட்ட பொன்னுப்பிள்ளை, திருமருகலாரின் தவில் வித்வானும், மும்மொழி புலமை பெற்றவரும், எல்லா இசைக்கருவிகளையும் இசைக்கத் தெரிந்தவரான அம்மாசத்திரம் கண்ணுச்சாமி பிள்ளையிடம் நாகசுரம் பயில அனுப்பப்பட்டார். அவரிடம் 2 ஆண்டுகள் பயிற்சி முடித்துக்கொண்டு திருவாவடுதுறை வந்து சேர்ந்தார்.

*1913* ஆம் ஆண்டு பொன்னுப்பிள்ளை மூலம் ஆதீனத்திற்கு முன்பு நாகசுரம் வாசிக்க, வாசிப்பைக் கேட்ட ஆதீனம், மடத்து நாகசுர கலைஞராக இராஜரத்தினத்தை நியமிக்கிறார். மாத சம்பளம் ஏழு ரூபாய். அப்போது இராஜரத்தினத்திற்கு வயது பதினைந்து!

**முதல் நாகசுர நிகழ்ச்சி:**

திருக்கோவிலூர் தபோவனத்தில் இராஜரத்தினம் பிள்ளையின் முதலாவது நாகசுரக் கச்சேரி நடைபெற்றது. அதற்கு தவில் வாசித்தவர் கண்ணுசாமி பிள்ளை. இருவருக்கும் மோதிரங்கள் மடாதிபதியால் வழங்கப்பட்டது. மறுநாள் அதே இடத்தில் ராஜரத்தினம் பிள்ளை பாட்டுக் கச்சேரி செய்ய, கண்ணுசாமிப் பிள்ளை மிருதங்கம் வாசித்திருக்கிறார். அன்றும் பல பரிசுகளைப் பெற்றிருக்கின்றனர். இக்கச்சேரியைத் தொடர்ந்து இராஜரத்தினம்

பிள்ளையின் புகழ் எங்கும் பரவத் தொடங்கியது. பல இடங்களில் கச்சேரிக்கு அழைக்க மடத்தின் அனுமதியோடு போய்வரலானார். இராஜரத்தினத்திடம் திருமருகலாரின் இசை நுணுக்கங்களைக் கண்டு அம்மாசத்திரம் கண்ணுச்சாமி (குருவே)யே அவரிடம் தவில் வித்வானாக இருந்து வாசித்து வந்தார்.

**ஆதீனக் கலைஞர்:** 1914 ஆம் ஆண்டு தனது பதினாறாவது வயதில் திருவாவடுதுறை ஆதீன மடத்தின் ஆஸ்தான நாகசுரக் கலைஞராக ஆக்கப்பட்டார். சம்பளம் நூறு கலம் நெல்! ஆதீனத்திற்கு உட்பட்ட பல்வேறு கோயில்களில் கச்சேரி செய்யும் வாய்ப்பு கிட்டியது. வைத்தீஸ்வரன் கோயில், மயிலாடுதுறை, திருவிடை மருதூர், சூரியனார் கோயில், ஆவுடையார் கோயில், திருவாலங்காடு முதலிய கோயில்களில் உத்ஸவங்களுக்கு போய் வாசிக்க வேண்டும். இதுதான் அவர் வேலை.

**குடும்ப வாழ்க்கை**

தவில் வித்வான் நீடாமங்கலம் மீனாட்சிசுந்தரம் பிள்ளைக்கு நீடாமங் கலத்தில் திருமணம் நடந்தது. அதற்கு நாகசுரக் கச்சேரி செய்ய இராஜரத் தினம் பிள்ளை சென்றிருந்தார். இவர் இசையைக்கேட்ட தஞ்சை சாமிநாத பிள்ளை, மிகவும் மகிழ்ந்து போய் தன் மகள் சாரதாம்பாளை இராஜரத்தினம் பிள்ளைக்கு திருமணம் செய்துதர சம்மதித்து பகிரங்கமாகவே நிச்சயமும் செய்துவிட்டார். இவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் சிற்றப்பாவும் தஞ்சை இலை மார்க்கெட் வியாபாரியும் ஆவார்.




நீடா மங்கலம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை

திருமணம் 1914 ஆம் ஆண்டு ஆகஸ்ட் 14 ம் தேதி நடந்தது. மாப்பிள்ளைக்கு வயது 16. பெண்ணுக்கு வயது 9! திருமணம் திருவாவடுதுறையில் நான்கு நாட்கள் சிறப்பாக நடைபெற்றது.

**சென்னையில் முதல் கச்சேரி:**

டி.என்.ஆர். திருமணத்தில் கதாகாலட்சேபம் செய்த அந்நாளைய பெண் பாகவதராகிய இளையாங்கோவில் சாரதா கட்டிய முருகன் கோவிலுக்கு நாகசுரம் வாசிக்க சென்றிருந்தார் டி.என்.ஆர். இவர் வாசிப்பைக் கேட்ட பி.வி. நாராயணசாமி

அய்யர், விஸ்வநாத அய்யர் சகோதரர்கள், 1919 ஆம் ஆண்டு சென்னை தங்கசாலையில் உள்ள வேதவிநாயகர் ஆலயத்தில் வாசிக்க டி.என்.ஆரை அழைத்தனர். இதுவே டி.என்.ஆருக்கு சென்னையில் நடந்த முதல் நிகழ்ச்சி. இதையொட்டி 2 ஆண்டுகள் விநாயகர் சதுர்த்திக்கு ஒப்பந்தம் செய்யப்பட்டது. இந்நிகழ்வில் கரந்தை ரத்தினம்பிள்ளை, திருச்செங்காட்டாங்குடி ருத்ராபதி பிள்ளை தவில் வாசித்தனர். இதன் பின்னர் திருவல்லிக்கேணி ஆழ்வார் சந்நதி மற்றும் பல இடங்களில் வாசித்து வந்தார். சென்னை இவர் மூலமே 'ரெட்டைத் தவில்' வாசிக்கும் பழக்கத்தை ஏற்றது.

**திருமருலாரிடம் இருந்த மதிப்பு:**

ஒருமுறை எட்டையபுரம் ஜமீந்தார் அரண்மனையில் நாகசுரம் வாசிக்கச் சென்றிருந்தார். அங்கிருந்தபோது திருமருகல் நடேசபிள்ளை வாசித்த நாகசுரத்தை போனோகிராம் ரிக்கார்டில் கேட்டாராம். உடனே மருமகன் கக்காயி நடராஜ சுந்தரத்தை அழைத்து, நாகசுரத்தை எடுத்துவரச் செய்து அதில் 'கோர்த்திருந்த திருமருகலாரின் மணியை அவிழ்த்து எடுத்துவை. அதை பயன்படுத்தும் தகுதி தனக்கு இன்னும் ஏற்படவில்லை''? என்றாராம்.



திருமருகல்
நடேசப் பிள்ளை

**இராஜரத்தினம் பிள்ளையின் இசை:**

இராஜரத்தினம் பிள்ளை தன் சிறுவயது முதலே நாகசுர இசையைக் கேட்கும் சூழல் இருந்தது. இதனால் ''செவியாரல்'' என்னும் கேள்வி அறிவு வளர வாய்ப்பு ஏற்பட்டது. அக்காலத்தில் புகழ் பெற்றிருந்த செம்பொன்னார் கோயில் ராமசாமி பிள்ளை, மதுரை பொன்னுசாமி நாயனக்காரர், மன்னார்குடி பக்கிரியா பிள்ளை போன்றோரின் இசையை கேட்டிருந்ததால் இவற்றி லிருந்து மாறுபட்ட பாணிகளை கைக்கொண்டால்தான் தான் தனிமுத்திரை பெறமுடியும் என்ற முடிவுக்கு வந்தார். அதனால் தான் தனக்கென பாணியாக வாய்ப்பாட்டு இசையை நாகசுரத்தில் கொண்டு வந்தார். அதுவரை பெருமளவு கையாளாமல் இருந்த தோடி ராகத்தை இசைத்துப் பெரும் புகழ் பெற்றார். வாய்ப்

பாட்டில் கொடுக்கக் கூடிய கமகங்களை தனது பிருக்காக்களில் இழைத்து புதிய மெருகுடன் வெளிவரச் செய்தார். 'அரியது' 'கடினம்' என்று நினைக்கும் திருப்பங்களையும் வேலைப் பாடுகளையும் விளையாட்டுப் போல் செய்து முறுவலிப்பார். பழம் பெரும் மேதைகளான திருக்கோட்டிகாவல் கிருஷ்ணய்யர், காஞ்சிபுரம் நயனாபிள்ளை, மலைக்கோட்டை கோவிந்தசாமி பிள்ளை, வீணை தனம்மாள், இராமநாதபுரம் சீனிவாச அய்யங்கார், கோனேரிராஜபுரம் வைத்தியநாதைய்யர், மதுரை புஷ்பவனம் முதலியோரின் வழிகளைப் பின்பற்றி இசைத்து அவர்களே கேட்டு வியப்புறச் செய்தார் இராஜரத்தினம் பிள்ளை.

இராஜரத்தினம் பிள்ளையிடம் 'பிருகா' என்றால் அதற்கு கால அளவில்லாமல் இருக்கும். இடைவெளி இல்லாமல் தொடர்ச்சியாக, நீண்டநேரம் பிருக்காக்களை பொழிவார். இதை பொதுமக்கள் 'சூர்வாணம்' என்பார்கள். இராகம் வாசிப்பதிலும் இவருக்கிணை எவருமேஇல்லை. ஒவ்வொரு சங்கதியிலுமே, பிருகாவோ, விரலடியோ இல்லாமலிருக்காது. ஆரம்பமே விரலடியில்தான். சந்தர்ப்பத்திற்கு ஏற்றபடி வெவ்வேறு ராகங்களைப் பயங்கரமான சுருள் பிருக்காக்கள், விரலடிகள் நிறைந்ததாக வாசிப்பார். அவர் வாசிக்கும் மேல் காலேஸ்வரம் நினைத்துப் பார்க்கவும் முடியாத வேகத்திலிருக்கும். மூச்சுவிடாத முறையில் பிருக்காக்கள், தொடர்ச்சியகவும், சாட்டையாகவும் வக்கிரமாகவும் பறந்து கொண்டிருக்கும். இவ்விதமான பிருக்காக்களை இவரைத் தவிர வேறு எவரிடமும் கேட்க முடியவில்லை என்பதே இவர் பெருமை. இதென்ன பிருகாதானா? சாதகத்தால் இது பெறக்கூடியதாக இல்லை. இவர் நினைத்தவுடனே உதடுகளும், விரல்களும் இட்ட வேலயை செய்வோமென்று இவரிடம் துணைவேண்டி காத்துக் கிடக்கும்.

சின்னச் சின்ன பல்லவிகளை நிரவல் செய்து, சுரங்கள் வாசித்துக் கேட்போரையும், சக கலைஞர்களையும் திண்டாட வைத்து விடுவார் சில நேரங்களில். இவரது தனிச்சிறப்பு பல்லவிகள் அமைக்கப்படும் 'காலப் பிரமாணம்'. காலப் பிரமாணம் பற்றிய அறிவில்லாதாருக்கு பல்லவி மற்றும் 'வியவஹாரத்துக்கான பேச்சுக்கே இடமில்லை. சக கலைஞர்களை பயமுறுத்துவதற்கு, டி.என்.ஆர். வாசிக்க அமைத்துக் கொள்ளுவதை 'இரண்டுங் கெட்டான்' காலப் பிரமாணம் என்பார்கள். துரிதமாகவோ, விளம்பமாகவோ இல்லாத இடைவெளிப்பட்டதாக அது இருக்கும்.

எந்தப் பல்லவி எவ்விதமான காலப்பிரமாணத்தில் நன்றாக இருக்கும் என்பது அவருக்கு மட்டுமே நன்கு தெரியும். இந்த 'சித்துவேலை'களை டி.என்.ஆர். மதுரை பொன்னுசாமி பிள்ளையிடத்தும், சிதம்பரம் வைத்தியநாத பிள்ளையிடமும் கற்றுத் தெரிந்து வைத்திருந்தார். கீர்த்தனைகளை, வெறும் சுரங்களாக மட்டுமே பயின்று இசைப்பவர்கள்தான் அதிகம். இதற்கு விதிவிலக்காக இருந்தவர் டி.என்.ஆர். ஏனெனில் இவரே சிறந்த பாடகராக இருந்த காரணத்தினால், சாகித்யமாகவே கற்று, அவற்றைப் பலமுறை பாடிப்பாடி செம்மைப்படுத்திக் கொண்ட பின்பே அவர் நாகசுரத்தில் வாசிப்பது வழக்கம். இதனால் அவருடைய நாகசுர இசை வாய்ப்பாட்டு வரும் இடங்களில் 'துத்தகார' மும் மற்ற இடங்களில் 'அகார' மூமாக அமைந்திருக்கும். டி.என்.ஆரின் எல்லா முத்திரைகளையும் அவர் சீடர்களிடம் எங்காவது வந்து தலைகாட்டுவதைப் பார்க்கலாம். இரவு 11 மணிக்கு தொடங்கும் 'தோடி ராகம்' மறுநாள் காலை 6 மணி வரைக்கும் இசைத்த பெருஞ்சிறப்பு எவருக்கு வரும். 1920 - 30 காலப்பகுதியில் தமிழ்நாடு முழுவதும் தெரியக்கூடிய இசைவாணர் ஆனார்.

### கிட்டப்பாவின் அறிமுகம்:

நாடகமேடையில் இசைமழை பொழிந்து வந்த எஸ்.ஜி. கிட்டப்பா, பலநாட்கள் இராஜரத்தினம் பிள்ளை யுடன் பழக்கம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்று தருணத்தை எதிர் பார்த்து வந்தார். அதற்கேற்றாற்போல 1925 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் திருச்செந்தூரில் நாகசுரக் கச்சேரிக்கு சென்றபோது, திருநெல் வேலி புகைவண்டி நிலையத்திலுள்ள ஸ்பென்சர் அறையில் மணிசர்மா, திருநெல்வேலி ருத்ரம் பாகவதர், தளவாய் பொன்னையா முதலியோரால் கிட்டப்பாவுக்கு அறிமுகம் செய்துவைக்கப்பட்டார். கிட்டப்பா இறக்கும்வரை இருவரும் நெருக்கமான நட்புடன் இருந்தனர்.

எஸ்.ஜி. கிட்டப்பா

**தன்மானம் மிக்க கலைஞர்:**

நாகசுரக் கலைஞர்கள் வழங்கும் இசையினை வாரியுண்ட தமிழக மக்கள், சமுக வாழ்க்கையில் ஒருபடி அவர்களை இறக்கியே வைத்திருந்தனர். 19 ஆம் நூற்றாண்டுவரை இந்த நிலையே நிலவி வந்தது. நாகசுரக் கலைஞர்கள் என்றால் பார்த்தவுடனே தெரிந்து விடும்படி அவர்கள் மேலே சட்டையோ, துண்டோ அணிந்து வாசிக்கக் கூடாது. காலில் செருப்பும் போடக்கூடாது. மாலை தொடங்கும் நாகசுர இசை விடாமல் அடுத்தநாள் காலை வாசிப்பவர்கள் மேலே துண்டு கூட அணியக்கூடாது என்பது எவ்வளவு பெரிய நாகரீகம்! கதர்வேட்டி, தலையில் குடுமி இவற்றுடன்தான் காட்சி தருவார்கள். இவை எல்லாவற்றையும் தூக்கி எறிந்துவிட்டு மாற்றியவர்தான் டி.என்.ஆர்.

நான்கு பிரகாரங்கள், நாலுவீதிகள், தேர் எவ்வளவு அசைகிறதோ அவ்வளவு நேரமும் நின்று கொண்டே வாசிக்க வேண்டும். மேடை கிடையாது.

நாகசுரக்காரர்களில் இராஜரத்தினம் பிள்ளைதான் முதலில் ‘கிராப்’ வைத்துக் கொண்டவர். கோட், செர்வாணி, சூர்வால் முதலிய இராஜ உடைகளை அணிந்துகொண்டு, காலில் ‘ஷூ’ போட்டுக் கொண்டுதான் வாசிப்பார். எந்த விழாவானாலும் மேடை போட்டுத்தான் வாசிக்க முடியும் என்று கறாராகக் கூறிவிடுவார். இவர் மூலமே மற்ற கலைஞர்களுக்கு சமுகத்தில் மதிப்பும், மரியாதையும் ஏற்பட்டது.

திருநெல்வேலி லப்பாஜி வெங்கட்ராமன் என்பவர் வீட்டில் 1929 ஆம் ஆண்டு நடைபெற்ற திருமண விழாவில் இரவு ஊர்வலத்தில் மேடையிட்டு அதிலமர்ந்து வாசித்தார். அதுமுதல் மேடைக் கச்சேரிகளைத்தான் செய்துவந்தார். இதுபோலவே திருவையாறு உற்சவத்தில் நாகசுர வித்வான்கள் நின்று கொண்டுதான் வாசிக்க வேண்டும் என்றிருந்த மரபை உடைத்து முதன் முதலாக மேடையில் அமர்ந்து வாசித்தவர் டி.என்.ஆர்.

அவர் நின்றுகொண்டு வாசிக்கும் இடங்கள் மூன்று ஊர்களில் மட்டும்தான். திருவாவடுதுறை மடத்திலும், மாயூரம் துலாமாத சுவாமி புறப்பாட்டிலும், திருவிடைமருதூர் தைப்பூச வெள்ளிரத விழாவிலும் மட்டுமே நின்றுகொண்டு வாசிப்பார்.

**நாகசுரத்துக்கு சுருதி தம்புரா!**

நாகசுரத்துக்கு சுருதி 'ஒத்து' என்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் எதிலும் மாற்றம் செய்து பழக்கப்பட்ட டி.என்.ஆர். இதிலேயும் ஒரு புதுமை செய்தார். நாகசுரத்துக்கு 'தம்புரா'வை சுருதியாகக் கொண்டார். சில இடங்களில் மிருதங்கத்துடன் வீணையுடன் வாசித்துள்ளார். இதைப் பார்த்துக் கொண்டு சநாதனிகள் சும்மா இருப்பார்களா? உடனே ''இனி வாய்ப் பாட்டுக்கு சுருதியாக 'ஒத்தை'தான் வைத்துக் கொள்ளணும் போலே'' என்று புரளியைக் கிளப்பி விட்டவுடன் - அவர்களின் வாயை மூடிக் கொள்வதற்கேற்ற பதிலைத் தந்தார். ''நாகசுரத்துக்கு தம்புரா சுருதி சேருமா, சேராத என்பதிருக்கட்டும். தற்காலத்தில் எல்லாப் பாட்டுக்கும் தம்புரா சுருதி சேருகிறதா? என்பதைப் பற்றி கொஞ்சம் யோசிக்க வேண்டும்'' என்றார்.

**டி.என். இராஜரத்தினம்/'தோடி' இராஜரத்தினமானார்:**

''தோடி'' வாசிப்பின் மூலம் புகழடைந்திருந்த டி.என். இராஜரத்தினம் பிள்ளையை எப்படியாவது கிராமபோன் ரிக்கார்டில் பதிவு செய்துவிட வேண்டும் என்று காத்திருந்தது 'ஓடியன்' நிறுவனம். இது ஏ.வி.எம். மெய்யப்ப செட்டியாரின் சரஸ்வதி ஸ்டோர் மூலம் உருவான இசைத்தட்டுக் கம்பெனி. 'மிட்லண்ட்' ஏ.கே. ராமசந்திர அய்யர் சிறந்த ரசிகரும், இசை நிகழ்ச்சிகளை அமைத்துத் தருபவரும் ஆவார். இவர் மூலம் மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோயிலில் டி.என்.ஆர். இசைநிகழ்ச்சி நடைபெற்றது. அவர் மூலமாகவே இராஜரத்தினம் பிள்ளையை இசைத்தட்டு வெளியிடுவதற்கு இணங்க வைத்தனர். 1930 ஆம் ஆண்டு டி.என்.ஆரின் தோடி இசை - இசைத்தட்டுகளாக மலர்ந்தன. 'கச்சேரி செட்' என்கிற பெயரில் எட்டு இசைத்தட்டுகள் வெளிவந்தன. தோடியை எட்டுமணி நேரம் வாசிப்பார் டி.என்.ஆர். இதை எட்டு நிமிஷத்தில் கொண்டுவர படாதபாடு பட்டு சுருக்கி எப்படியோ கொண்டுவந்து விட்டனர். இத்தட்டுக்களில் அவருடன் மருமகன் கச்காயி நடராஜ சுந்தரம் பிள்ளையும் இணைந்து இசை வழங்கியுள்ளார். அக்காலத்தில் 'வானொலி' வராத காலம். இசைத்தட்டுக்கென்று ஒரு மௌசு இருந்த நேரத்தில் இசைத்தட்டுகள் வெளிவந்ததால் நடுத்தர மக்களிடம் பெரும் செல்வாக்கைப் பெற்றார். உடனே அவர் ரேட்டும் ஆயிரக்கணக்கில் உயர்ந்தது. உலகில் தமிழர் இருக்கும் இடமெங்கும் இசைத் இதட்டுகள் சென்றன. இதனால்

வெளிநாட்டு வாய்ப்புகள் குவிந்தது. இலங்கை, சிங்கப்பூர், மலேஷியா முதலிய நாடுகளுக்கு பிள்ளையவர்கள் 1930 இருந்து 47 வரை சென்று வந்திருக்கிறார்.

**நாகசுரத்தில் புதுமை:**

திமிரி நாகசுரம் பேரொலியை எழுப்பும். ஒலிபெருக்கி கண்டுபிடித்து வழக்கத்திற்கு வந்துவிட்ட பின்னர், ஒலிபெருக்கியில் வாசித்தால் மேலும் ஒலி பெருகி கேட்க முடியாமல் செய்துவிடும் என்பதை உணர்ந்த டி.என்.ஆர். திமிரியை பாரி நாயனமாக்கினார். இதன் மூலம் அதன் சுருதி 2 அல்லது 2½ கட்டை ஆனது. ரிகார்டு பிளேயரையே பார்த்து வந்ததால் அதன் ஒலிபெருக்கியின் வாய்போல நாகசுரத்தின் கீழணைசை மாற்றினார். ஒலிபெருக்கி (Sound speaker) வந்தவுடன் நாகசுரத்தில் சுருதி குறைக்கப்பட்டது போலவே வாய்ப்பாட்டிலும் சுருதி குறைவு மாற்றம் செய்யப் பட்டது. திமிரியாகவும் இல்லாமல் பாரியாகவும் இல்லாமல் இடைபட்ட இடைபாரி வகையை மதுரை பொன்னுச்சாமி நாயனக்காரர் முன்பு அறிமுகப்படுத்தியிருந்தார். ஆயினும் இந்த இடைபாரி வகையில், மத்யமம் என்கிற சுவரம் சரிவர ஒலிக்காத குறைபாடு இருந்தது. இதை சீர் செய்யும் பொருட்டு டி.என்.ஆர். உடல் பகுதியில் பக்கவாட்டிலமையும் துளைகள் இடப்படும் நிலைகள் மாற்றப்பட்டன. விரல் துளைகளில் ஏழாவதுக்குப் பக்கவாட்டில் இரு துளைகளும், 'அதனஸ்வரம்' அல்லது 'முத்திரை' எனப்படும் எட்டாவது துளையின் இரு பக்கங்களிலும் முறையே ஒவ்வொரு துளைகள் இடப்பட்டன. மாற்றம் பெற்ற நாகசுரத்தை 'மத்யம சுருதி நாகசுரம்' என்று அழைப்பது வழக்கமாயிற்று. ஏனெனில் இதில் நான்கு மத்யமஸ்வரம் ஒலிக்கிறது. இந்த வகை 'நாகசுரம்' தயாரிப்பதற்கு டி.என்.ஆருக்கே உதவியாக இருந்தவர் ரங்கநாத ஆசாரியார் ஆவர். அவர் இன்றும் தனது எண்பது வயதிலும் சுறுசுறுப்பாக 'நாயனம்' தயாரிக்கும் கலைஞராக திருவாவடுதுறையை அடுத்த நரசிங்கன்பேட்டையில் வசிக்கிறார். இராஜரத்தினம் பிள்ளை தன் கைப்பட "கெவர் மெண்டார் இவரை ஆதரித்து தகுந்த ஏற்பாடு செய்து தரவேணும்" என்று நற்சாட்சி பத்திரம் எழுதிக் கொடுத்திருக்கிறார்.

**திரைவானில் டி.என்.ஆர்.:**

பேசாப்படம், பேசத்தொடங்கியதுமே 60, 70 பாடல்கள் என்று சுவரொட்டியில் போடும் அளவுக்கு இசை திரைப்படத்தில்

பெருக்கெடுத்தது. இதையொட்டி இசைஞர்களுக்கும் திரைப்படத்தில் வாய்ப்புகள் பெருகின. புகழ்பெற்ற பாடகர்கள் அனைவரும் திரையுலகில் நுழைய ஆரம்பித்தனர். இசைத்தட்டு, கச்சேரி இவற்றை விட திரைப்படத்தில் நடிப்பதன் மூலம் ஏராளமான தொகை கிடைத்ததும் ஒரு காரணம். எம்.எஸ். சுப்புலட்சுமி - சாவித்திரி, மீரா, சேவாசதனம் முதலிய படங்களில் நடித்தார். இவருடன் ஜி.என்.பி. 'சகுந்தலை'யில் நடித்தார். எம்.எம். தண்டபாணி தேசிகர், 'நந்தனார்' 'திருமழிசையாழ்வார்', 'பட்டினத்தார்' முதலிய படங்களில் நடித்தார். சுந்தரமூர்த்தி ஓதுவார் 'சுந்தரமூர்த்தி நாயனார்' படத்தில் நடித்துள்ளார். சிவகவி, சீதாகல்யாணம், ராதா கல்யாணம் முதலிய படங்களில் எஸ். ராஜம் நடித்துள்ளார். இவர்களைப் போலவே டி.என். இராஜரத்தினம் பிள்ளையும் திரையுலகில் நுழைந்தார். 'மிஸ் கமலா' எனும் படத்தில் நாகசுர நிகழ்ச்சி வருவதுபோல வாய்ப்பளித்துள்ளனர். இந்நிகழ்ச்சி படத்தில் 20 நிமிடம் வருகிறது. பின்னர் 1940 ஆம் ஆண்டு வெளிவந்த 'கவிகாளமேகம்' என்ற படத்தில் கதாநாயகனா நடித்தார். இப்படத்தில் எஸ்.பி.எல். தனலட்சுமி கதாநாயகியாக நடித்தார். இவர்களுடன் கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன், டி.ஏ. மதுரம் நகைச்சுவைப் பகுதியினை வழங்கினர். புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பாடல், கதை, வசனம் எழுதியிருந்தார்.

இப்படத்தை மதுரை ஸ்ரீ தண்டபாணி பிலிம்ஸ் லிட் தயாரிப்பில் எல்லீஸ். ஆர். டங்கன் (அமெரிக்கர்) இயக்கத்தில் வெளிவந்தது.

கதையில் கவி காளமேகம் அறம் பாடுவது போன்ற காட்சி. கீழே கொப்பரையில் எண்ணெய் கொதித்துக் கொண்டிருக்க கொப்பரையின் மேலே காளமேகம் உட்கார்ந்திருக்கும் பலகையை நான்கு யானைகள் சங்கிலிகளால் பிடித்திருக்கும். அதிமதுர கவியின் கேள்விகளுக்கு காளமேகம் உடனுக்குடன் பாடி வரவேண்டும். தவறினால் யானைகள் சங்கிலியை விடும். காளமேகம் கொப்பரையில் விழவேண்டியதுதான். இக்காட்சியை டங்கன் எடுக்க விரும்பவில்லை. ஆனால் புரட்சிக் கவிஞர் விருப்பத்துக்கு இணங்க படமாக்கப்பட்டது. டி.என்.ஆர். தனக்கு என்ன நேர்ந்தாலும் பரவாயில்லை என்று சொன்னதால் அக்காட்சி படமாக்கப்பட்டது. இப்படத்தில் தன் சொந்தக் குரலில் பல பாடல்களைப் பாடியிருக்கிறார் டி.என். இராஜரத்தினம் பிள்ளை.



'கவிகாளமேகம்' படத்தில் டி.என்.ஆர்., எஸ்.பி.எல். தனலட்சுமி,
டி.ஏ. மதுரம் (1940)

கரகரப்ரியாவில் விருத்தமாக....

''தாள்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்
திரண்டருவி பாயும் திருமலை மேலெந்தைக்கு
இரண்டு ருவு மொன்றாயிசைந்து

- என்ற பாடலையும்

தோடி ராகத்தில்...

நாணுகின்றேன் என்று தன் முகங்காட்டிடும்
நங்கையைப் போல்
பேணுகின்றேனென்றலை மீதுதிக்கின்ற
பேரொளியில்
பூணுகின்றேனென்று
பொன்னாடை பெற்றனல்
காணுகின்றேன் அதில் என் அன்னை
முக்கணிற்கண் ஒன்றையே...''

மேலும் சங்கராபரணம், சிம்மேந்திர மத்திமம், கானடா, காம்போதி, புன்னாகவராளி, பிலஹரி ராகங்களில் ராகமாலிகையாக மிக நீண்டதொரு விருத்தமாக ''சீருள்ள வெண்குடை'' என்ற பாடலையும் பாடியிருக்கிறார். இதையடுத்து 'திருநீலகண்டர்' படத்தில் சிதம்பரம் கோயில் பிரகாரத்தில் வலம் வரும் காட்சியில் கருவறையை பார்த்தபடி நாகசுரம் வாசித்தபடி ஒருசில நிமிடங்கள் நீடித்த அக்காட்சியில் ராஜரத்தினம் பிள்ளை தோன்றினார்.

'ராஜமுக்தி' திரைப்படம் தியாகராஜ பாகவதர் பானுமதி இணைந்து நடித்தது. இப்படத்தில் ராஜசபையில் நடக்கும் இசைக் கச்சேரியில் ஒரு முழுப் பாடலையும் வாசித்து ரசிகர்களின் நெஞ்சங்களைக் கொள்ளைக் கொண்டார்.

'கவி காளமேகம்' படத்தில் டி.என்.ஆருக்காக காளமேகம் நாகசுரம் வாசிக்கும் காட்சி சேர்க்கப்பட்டிருந்தது!

எம்.கே. தியாகராஜ பாகவதர் திருநீலகண்டர் படத்தில் பாடுவதற்காக டி.என்.ஆரிடம் பைரவி, மணிரங்கு முதலிய ராக ஆலாபனையை சீடனாக இருந்து கற்றுக் கொண்டேன் என்று மணிக்கொடி ராமய்யாவிடம் சொல்லிப் பெருமைப்பட்டுக் கொண்டாராம்.

### வானொலியில் டி.என்.ஆர்.

நாகசுரத்தில் பெரும் புகழ் பெற்றிருந்தாலும், வாய்ப் பாட்டையும் விடாமலே இருந்தார். 1936 ஆம் ஆண்டு தினமணி ஆண்டு மலரில் எல்லா நாகசுர வித்வான்களையும் வட்டமாகப் போட்டு அதன் நடுவில் டி.என்.ஆரைப் போட்டிருந்தது. அதைப் பார்த்த டி.என்.ஆர். ஆசிரியருக்கு தொலைபேசி செய்து 'என்ன தம்பி என்னை நாகசுர வித்வான்களோடு மட்டும் போட்டிருக்கே. நான் சங்கீத வித்வானும் ஆச்சே' என்றாராம்.

திருச்சி வானொலி நிலையத்தில் அக்காலத்தில் இசைநிகழ்ச்சி தயாரிப்பாளராக டி. சங்கரன் இருந்தார். அவர் இருக்கும் நேரத்தில் பலமுறை வானொலி வாயிலாக தன் வாய்ப்பாட்டு கச்சேரிகளை மக்களுக்கு வழங்கியுள்ளார். அவற்றில் ஒன்று மட்டும் பாதுகாக்கப்பட்டுள்ளதாம். அதில் திருவீழிமிழலை சுப்பிரமணிய பிள்ளை வயலின் இசைக்க, தஞ்சாவூர் டி.கே. மூர்த்தி மிருதங்கத்துடன் டி.என்.ஆர். பாடிய நிகழ்ச்சி உள்ளது.

1952-ம் ஆண்டு தனது சிஷ்யரான காருக்குறிச்சி அருணாச்சலத்துடன் இணைந்து சென்னை வானொலியில் நாகசுர இசையை வழங்கியிருக்கிறார். இவை இசை வரலாற்று ஆவணங்கள். இவை பாதுகாக்கப்பட வேண்டும்.

### தமிழிசை இயக்கத்தில் டி.என்.ஆர்.

1943 ஆம் ஆண்டு சென்னையில் நடைபெற்ற தமிழ் இசை முதல் மாநாட்டில் நாகசுர அரங்கில் டி.என். இராஜரத்தினம் பிள்ளை, பி.எஸ். வீருசாமிப் பிள்ளை, நீடாமங்கலம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலியோர் அமுத இசையினை பாய்ந்தோடச் செய்தனர். கும்பகோணத்தில் நடந்த தஞ்சை மாவட்ட முதல் தமிழ் இசை மாநாடு 25, 26.4.1943 இல் நடந்தபோது வரவேற்புரையாற்றினார். தமிழிசை இயக்கத்தின் தாக்கத்தால் தானே பல தமிழ்ப்பாடல்களை இயற்றி நாகசுரத்திலும் வாசித்துள்ளார். அவற்றில் இன்று கிடைப்பவை: 'கருணை செய்வாய்' என்ற கல்யாணி ராகப் பாடலும், 'சிவகுரு' என்ற பாடலும் ஒலிநாடாவில் கிடைக்கின்றன. 1945 ஆம் ஆண்டு திராவிடர் கழகம் நடத்திய 'திராவிடர் இசை' விழாவுக்கு இன்றைய முதல்வருடன் காஞ்சி சென்று நாதமழை பொழிந்துள்ளார்.

**தேவதாசி ஒழிப்பு போரில் பங்கு:**

தேவதாசி குலத்தில் தோன்றி அவர்களின் இழிவுகளை ஒழிக்க பாடுபட்டு வந்தார் மூவலூர் இராமாமிர்தம்மாள். ஒவ்வொரு ஊருக்கும் சென்று கூட்டங்கள் போட்டு 'பொட்டு' அறுப்புப் போர் நடத்தி வெற்றி கண்டவர். அவர் எழுதிய நாவலான 'தாசிகளின் மோசவலை' அல்லது 'மதிபெற்ற மைனர்' நூலில் டி.என்.ஆரைப் பாராட்டியுள்ளார். சமூக பொறுப்பு மிகுந்தவராக வும் இருந்துள்ளது தெரிய வருகிறது.

''பிரிட்டானியத்தையும் பார்ப்பனீயத்தையும் கூட எளிதில் எதிர்க்கலாம் - இந்த தேவதாசி முறையை எதிர்ப்பது சமானிய வேலை அன்று என்ற முடிவுக்கு வந்தோம். எனது சொந்த சமூகத்திலேயே ஏற்பட்ட பலமான எதிர்ப்புகளுக்கிடையே யாரையும் லக்ஷியம் செய்யாமல் எங்கள் சீர்திருத்த முயற்சிகளுக்கு மேன்மேலும் உற்சாகமுட்டி உதவி புரிந்த தோழர்களான நாகசுரம் டி.என். இராஜரத்தினம் பிள்ளை, சீர்காழி பெ.நா. சுப்பையா பிள்ளை போன்ற தன் மதிப்புணர்ச்சி மிக்க அன்பர்களை நான் என்றும் மறவேன்'' என்று முன்னுரையில் தெரிவித்துள்ளார்.

**பிள்ளைக்காக திருமணங்கள்:**

இராஜரத்தினம் பிள்ளையின் முதல் மனைவிக்கு குழந்தைப் பேறு இல்லை என்று திருப்பரங்குன்றத்தில் வசித்துவந்த சிவகிரி செல்லையா நாகசுரக்காரரின் மகளான சுப்புத்தாயம்மாள் இரண்டாவது மனைவியானார். மூன்றாவது மனைவி செய்யூரைச் சேர்ந்த சூர்யாபாய். நான்காவது மனைவி பெண்ணாடத்தைச் சேர்ந்த ஜனகத்தம்மாள். ஐந்தாவது மனைவி தூத்துக்குடியைச் சேர்ந்த பாப்பம்மாள். இவர்களில் யாருக்கும் ஆண் குழந்தை இல்லாததால் 'சிவாஜி' என்ற பையனை தத்தெடுத்து மகனாக்கிக் கொண்டார். பிற்காலத்தில் சிவாஜிக்குத் திருமணம் செய்து வைத்து மகனில்லாக் குறையைப் போக்கிக் கொண்டார். சிவாஜிக்கு முன்பு அவர் அதிகம் அன்பு வைத்து வளர்த்து, தமக்கை மகனான கக்காயி நடராஜ சுந்தரத்தையே ஆகும். 1929 வரை டி.என்.ஆருடன் இணைந்து தொழில் கற்று இணை நாதசுரம் வாசித்து வந்தார்.

டி.என்.ஆரை வளர்த்து ஆதீன வித்வான் ஆக்கியவர் பொன்னுபிள்ளை. மேலும் இவர் சிற்றப்பா உறவு. அதனால் இவர் பெண்கள் டி.என்.ஆருக்கு சகோதரி முறை. அவர்கள் அனைவரையும் டி.என்.ஆரே பிரபலமான மணமகன்களுக்கு திருமணம் செய்து வைத்தார். ராஜாம்பாள், லட்சுமிகாந்தம் என்ற இருவரையும் திருவெண்காடு சுப்பிரமணிய நாயனக்காரர் திருமணம்

புரிந்தார். சுபத்ரா என்ற சகோதரியை புகழ்பெற்ற பரதக்கலை வல்லுனரான கே.என். தண்டாயுதபாணி பிள்ளை மணந்தார். தங்கச்சியம்மாளை திருவாரூர் நாராயணசாமி நாகசுரக்காரரும், கிருஷ்ணவேணியை திருவிடைமருதூர் கல்யாண சுந்தரம் பிள்ளையும் மணந்தார்.

**டி.என்.ஆர். மகள்:**

நெருங்கிய உறவினர்களிடம் விசாரித்ததில் சூர்யாபாய் அம்மாள் கருவுற்று பேறுகாலத்தில் மற்ற மனைவிகளிடம் ஏற்பட்ட மனத்தாங்கல் காரணமாக தாயார் வீடு சென்றதாகவும், அங்கு வசதிகள் இருந்தும் வாரிசு இல்லாத குடும்பமாக இருந்ததால் அவர் பெற்ற பெண் - வனஜாவை கருத்து வேறுபாடு காரணமாக தந்தையார் இராஜரத்தினம் வந்தபோது காண்பிக்கக் கூட மறுத்து விட்டதாகவும் - அவரும் பெண் மகவுதானே என்று விட்டு விட்டு வந்தாகவும் தகவல்கள் தெரிவிக்கின்றன. திருவாவடுதுறையில் இராஜரத்தினம் பிள்ளை வாழ்ந்த வீடு வனஜா அம்மையார் பொறுப்பில்தான் (இன்று) உள்ளது. தமிழக அரசும் வனஜா அம்மையாருக்கு சில பதவிகள் தந்துள்ளது என்பது குறிப்பிடத் தக்கது.

**டி.என்.ஆரின் இசை பரம்பரை:**

டி.ன்.ஆர் பயிற்சி கொடுத்த ஒரே நபர் அவருடைய மருமகனான கக்காயி நடராஜசுந்தரம் பிள்ளை மட்டுமே. கக்காயியை விட பெருமளவு டி.என்.ஆர் புகழை வெளிப்படுத்தியவர் காருக்குறிச்சி அருணாச்சலமே ஆவார். காருக்குறிச்சியார் அடிப்படை நாகசுரப் பயிற்சியை முடித்து விட்டு மேலே கற்றுக்கொள்ள தகுந்த ஆசியரைத் தேடிக் கொண்டு இருந்தபோது, திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள கு.எ. பண்ணையில் க்ச்சேரி செய்ய வந்திருந்த திருவாவடு துறையாரை



காருக்குறிச்சி அருணாசலம்

28.6.1935 ஆம் ஆண்டு சந்தித்து சீடரானார். பண்ணையிலேயே ஒத்தாக டி.என்.ஆருடன் வாசித்தார். குருவுக்கு பிடித்துப்போய் தன்னொடு சில ஆண்டுகள் வைத்திருந்தார்.

கற்பிக்கும் பழக்கம் எல்லாம் திருவாவடுதுறையாருக்குப் பிடிக்காது. வீட்டிலிருக்கும் போதெல்லாம் வாசித்துக் கொண்டிருப் பார். அதை கவனமாகக் கேட்பது, கச்சேரிகளில் கூட அமர்ந்து கேட்பது இவைதான் பயிற்சி. கற்றலைவிட கேட்டலே இசைப் பயிற்சிக்கு சிறந்ததாதலால் அதில் சிறந்தவரானார் காருக்குறிச்சியார். ராக ஆலாபனை, கீர்த்தனை வாசிப்பில் புகழ் பெற்றார். திருப்புகழ், காவடிச்சிந்து வாசிக்கும்போது நாகசுரம் கொஞ்சும்.

குருமீது காருக்குறிச்சியாருக்கு மிகுந்த மரியாதை உண்டு. தன்னுடைய புதிய வீட்டுக்கு 'இராஜரத்தினம் விலாசம்' என்றே பெயரிட்டார். குறுமலை சுந்தரம் பிள்ளை பையனுக்கு பெயரிட கேட்டபோது தனது குருவின் இளமைக்காலப் பெயரான 'பாலசுப்பிரமணியம்' என்றே வைத்து குருபக்தியைக் காட்டிக் கொண்டார்.

தொடக்கத்தில் இராஜரத்தினம் பிள்ளையுடன் இணைந்து பல கச்சேரிகளில் வாசித்தார். பின்னர் தனியாக வாசிக்க ஆரம்பித்தார். டி.என்.ஆர். கூப்பிட்டபோது போய் வாசித்து வந்தார். திருவாவடுதுறையாரின் பாணி இவரிடம் மட்டுமே காணக்கூடிய தாக மாறியது.

**டி.என்.ஆர் ஆச்சரியப்பட்ட மூன்று கலைஞர்கள்:**

டி.என்.ஆர். தனது சமகால கலைஞர்களில் மூவரிடம் மட்டும் அவருக்கு எப்போதும் பயமிருந்து வந்ததாம். அவர்கள் பக்கிரி நாயனக்காரர், மன்னார்குடி சாரநாத நாயனக்காரர், கடைப்பட்டவர் திருச்சேறை முத்துகிருஷ்ணன். இம்மூவரில் முத்துகிருஷ்ண நாயனக்காரர். அசுர சாதகத்தால் எல்லாரையும் ஆச்சரியப்பட வைத்த கலைஞர். இவர் காலம் 1892 - 1929.

நாகப்பட்டணத்துக்கு அருகில் உள்ள கீவளூர் கோயில் திருவிழாவில் ஆண்டுதோறும் முத்துக்கிருஷ்ண பிள்ளைதான் வாசிப்பது வழக்கம். ஆனால் பிள்ளையவர்களுக்கு போதை பழக்கமும் இருந்ததால், பலமுறை சாமி புறப்பாடு தாமதமாகி இருக்கிறது. அவரை சுயநினைவுக்கு கொண்டு வருவது கடினம். எனவே திருவாவடுதுறையாரை ஏற்பாடு செய்தார்கள். ஆனால்

அறங்காவலர் மற்றவர்களுக்குத் தெரியாமல் முத்துகிருஷ்ணரையும் ஏற்பாடு செய்திருந்தார். கீவளூர் வந்த டி.என்.ஆர். இந்த விவகாரங்களை நன்கு தெரிந்தவர். அவர் தம்முடன் வந்தவரை முத்து கிருஷ்ண பிள்ளைக்கு இரவு தொடங்கி அடுத்த நாள் வரை 'தீர்த்தத்தில் ஆழ்த்தி' இருக்க வைக்க ஏற்பாடு செய்துவிட்டு, தனது கச்சேரியைத் தொடங்கினார். அறங்காவலர்க்கு எபபோதும் போலவே முத்துக்கிருஷ்ணன் தனது வேலையை காண்பித்து விடடார் என்று பொறுமிக்கொண்டிருந்தார். இரவு முழுவதும் போதையில் இருந்த முத்துக்கிருஷ்ணன் காலையில் விழித்தெழுந்து பார்த்து பதைபதைத்து கோவிலுக்கு ஒடி வந்திருக்கிறார். வீதியுலா முடிந்து சாமி வந்து சேர்ந்துவிட்டது. திருவாவடுதுறையாரும், கக்காயியும் வாசித்துக் கொண்டு நிற்பதைப் பார்த்த முத்துகிருஷ்ணர் ஒடிவந்து கக்காயி நாகசுரத்தை பிடுங்கி வாசிக்க ஆரம்பித்தவுடன் டி.என்.ஆர். ஒதுங்கிக் கொண்டாராம். முத்துக்கிருஷ்ணபிள்ளை வாசிப்பை கேட்டுக் கொண்டிருந்த அனைவருமே தம்மை மறந்தனர். ஏதோ வேற்றுலகில் சஞ்சரிப்பது போன்ற பிரம்மை அவர்களுக்கு. இந்த சம்பவத்தை திரு. பி.எம். சுந்தரத்திடம் விவரித்த இராஜரத்தினம் பிள்ளை, "அது என்னதான் வாசிப்போ, எனக்கு சொல்லத் தெரியவில்லை. நான் எப்படி வாசித்திருப்பேன் என்பது உனக்குத் தெரியும்... அத்தனையும் அழித்து, மெழுகிவிட்டார். முத்துக் கிருஷ்ணன் அண்ணன்... மாலையிலிருந்து விடியும் வரை நினைவற்றுக் கிடந்ததற்கு வஞ்சம் தீர்ப்பது போல சுமார் நான்கு மணி நேரம், எங்களையெல்லாம் நினைவற்றுப் போகுமாறு, அவ்வளவு பிரமாதமாக வாசித்துத் தீர்த்துவிட்டார்." டி.என்.ஆர். சக கலைஞரின் இசையில் எவ்வளவு மரியாதையும், பயமும் இருந்தது என்பதற்கு இந்நிகழ்வு ஒரு எடுத்துக்காட்டாகும்.

### வசிட்டர் வாயால் பிரம்மரிஷி பட்டம்:

முத்துசாமி தீட்சதரின் சீடரும், *116* தானவர்ணங்களை இயற்றிய மேதையான கூறைநாடு நடேச நாகசுரக்காரரின் *(1830 - 1925)* வீட்டுத் திருமணத்திற்கு டி.என். ஆரை ஏற்பாடு செய்தவர்: 'பல்லவிச் சுரங்கம்' என அழைக்கப்பட்ட சிதம்பரம் வைத்தியநாத பிள்ளை. *(1884-1937)*. பெரிய நாகசுரக்காரர்கள் வீட்டுத் திருமணமாக இருந்ததால் தனது திறமை எல்லாம் காட்டி வாசித்துக்கொண்டு வந்தார். ஒன்றுமே தெரியாதவர் போல எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டே வந்தார் வைத்தியநாத



சிதம்பரம்
வைத்திய நாதபிள்ளை

பிள்ளை. டி.என்.ஆர். பியாகடை, சகானா, வராளி, கௌளை முதலிய ராகங்களின் கோர்வையை கேட்ட வைத்தியநாத பிள்ளை ''ராஜரத்தினம் - உனக்கு 'சக்கரவர்த்தி' என்ற பட்டம் முழுக்க முழுக்கத் தகும்'' என்றாராம்.

''இவ்வளவு நாட்களுக்குப் பிறகு வசிஷ்டர் இதைக் கூறியுள்ளார். இனி நான் யாருக்கும் அஞ்ச வேண்டிய தில்லை'' என்று டி.என்.ஆர். தெரிவித் துள்ளார்.

தனது 30 வது வயதிலேயே 'தோடி இராஜரத்தினமானார். பிறகு 'அகில இந்திய வேணுகான நாதசுர சக்ரவர்த்தி' என்ற பட்டம் வந்தது. அவரது லெட்டர் பேடில் இசைமன்னர் மன்னன், இசைச்சிகரம், சங்கீத ரத்னாகரம், திருவாவடுதுறை ஆதீன சங்கீத மகாவித்வான் என்ற பட்டங்கள் உண்டாம்.

*1943* ஆம் ஆண்டு செட்டி நாட்டில் உள்ள கொத்தமங்கலத்தில் ராம அண் ராம குடும்பத்தார் வீட்டில் திரு. அண்ணாமலையின் திருமண விழாவின்போது டி.என்.ஆருக்கு 'இசை உலக ஜோதி' என்ற பட்டம் கிடைத்தது.

தஞ்சை மாவட்ட நாகசுர ரசிகர்களின் விருப்பத்திற்கிணங்க நாகப்பட்டணம் சட்டையப்பர் கோயில் விழாவில் பல்லாயிரக் கணக்கானோர் கூடிவிட்டனர். அந்த விழா வாசிப்பில் டி.என்.ஆர். எல்லோரையும் 'ஆஹா' போட வைத்ததைப் பார்த்த நாகை செசன்ஸ் நீதிபதி பஞ்சாபகேச அய்யர், ''இன்று நமது திருவாவடுதுறை இராஜரத்தினத்திற்கு ''அகில உலக நாதசுர சக்ரவர்த்தி' என்ற பட்டத்தை வழங்க விரும்புகிறேன். உங்களின் கருத்தென்ன என்று கேட்டதற்கு மக்கள் செய்த கையொலி விண்ணைத் தொட்டதாம்.

அக்காலத்தில் இந்த பட்டங்கள் கட்டாயம் சுவரொட்டிகளிலும், அழைப்பிதழ்களிலும் இருந்தால்தான் வருவாராம். இல்லாவிட்டால் அந்த கடிதங்களை பார்க்காமலே கிழித்துப் போட்டுவிடுவாராம்.

## ஆகஸ்ட் 15 - 1947

சுதந்திர நாள் விழாவுக்காக தில்லி கோலாகத்துடன் இருந்த நேரம். சுதந்திர நாள் பரிசாக நேருவுக்குத் தரும்படி திருவாவடுதுறை சந்நிதானம், ஒரு தங்கச் சங்கலியை டி.என்.ஆரிடம் கொடுத்து தில்லிக்கு அனுப்பியது. டி.என்.ஆரும் சுதந்திரப் பிரகடன ஹாலுக்குள் மற்றவர்களுடன் நின்று கொண்டிருந்தார். அந்நேரம் முந்தைய சமஸ்தான அதிபதிகளுக்கு கை குலுக்கிக் கொண்டு நேரு வந்தார். இவரின் ராஜ உடையை கவனித்து இவரும் ஒரு சமஸ்தானாதிபதி என்று நினைத்து கை கொடுத்தாராம்!

அந்த நேரத்தில் டி.என்.ஆருக்கு திடீரென்று ஓர் எண்ணம் தோன்றியதாம். சுதந்திரப் பிரகடனத்திற்கு முன் தன் மங்கள வாத்தியத்தால் வாசிக்க வேண்டும் என்ற விருப்பத்தை டாக்டர். சுப்பராயனிடம் (இவர்தான் ரங்கராஜன் குமாரமங்கலத்தின் தாத்தா அந்நாளைய அமைச்சர்) தெரிவித்தார். நிகழ்ச்சிநிரலில் நாகசுர நிகழ்ச்சி இல்லை. எனினும் திரு. சுப்பராயன் நேருவிடம் செய்த பரிந்துரையால் பத்து நிமிடம் ஒதுக்கப்பட்டது. ஆனால் டி.என்.ஆர் கொடுத்த நேரத்திற்கு மேல் வாசித்து அனைவரையும் கவர்ந்தார். நிகழ்ச்சி முடிந்தபின் நேரு சொன்னாராம், ''நான் ராஜரத்தினம் பிள்ளையை ஒரு சங்கீதக்காரர் என்று தெரியாமல் யாரோ ஒரு மகாராஜா என்று எண்ணி, கைகுலுக்கி விட்டேன். இப்போதுதான் தெரிகிறது அது தவறில்லையென்று, நிஜமாகவே இவர் சங்கீத உலகின் சக்ரவர்த்திதான்'' என்று கூறி பரிசுகள் தந்து அனுப்பி வைத்தாராம்.

### எழுத்தாளர்களுடன் இருந்த உறவு

டி.என். ஆரின் இசைக்கு மயங்காதவர்கள் உண்டா? எழுத்தாளர்கள் எம்மாத்திரம்! சிறுகதை மன்னன் புதுமைப்பித்தன், மணிக்கொடி பி.எஸ். ராமைய்யா, கு.ப. ரா. கரிச்சான் குஞ்சு, தி.ஜ.ர. தி. ஜானகிராமன், கு. அழகிரிசாமி, கி. இராஜநாராயணன் முதலியவர்கள் அவரவர் இருந்த ஊர்களுக்கு டி.என்.ஆர். வருகை தந்த போது உற்சாகத்துடன் கலந்து கொண்டு இருந்திருக்கின்றனர். டி.என்.ஆர். பற்றி ஒரு நாள் கரிச்சான் குஞ்சுவிடம் காந்தி பார்க்கில் 6 மணிக்கு பேசத் தொடங்கி இரவு 9 மணி வரை சென்றது. அவர் தெரிவித்த செய்தி: ''சாரங்கபாணி சந்நிதியில் மேடை போட்டு கச்சேரி நடந்தது. டி.என்.ஆர். வாசிக்க ஆரம்பித்தார் இரவு உணவு பசிக்கவே இல்லை. கேட்டுக் கொண்டே இருந்தோம். கச்சேரி

முடிந்து மடத்துத் தெருவில், இன்னொரு சங்கீதக்காரரின் வீட்டில் தங்கினார். காலையில் நானும் கு.ப.ராவும் போய்ப் பார்த்தோம். நாங்கள் எழுத்தாளர்கள் என்று பேச்சில் தெரிந்து கொண்டவுடன், மரியாதையாக நடத்தினார். மேடையில் இருக்கும் போது ரசிகர்கள் எது கேட்டாலும் வாசிக்கமாட்டார். அவர் போக்கில் வாசித்துக் கொண்டுபோவார். ஆனால் கு.ப.ரா. மகுடி, இங்கிலீஸ் நோட் எல்லாம் வாசிக்க சொன்னதற்கு மறுக்காமல் பலவித பாணிகளையும் எங்களுக்காக வாசித்துக் காண்பித்தார். அது ஒரு மறக்கமுடியாத சம்பவம்'' என்று கரிச்சான்குஞ்சு தெரிவித்தார்.

**மற்றொரு நிகழ்ச்சி:**

டி.என்.இராஜரத்தினம்பிள்ளை திருநெல்வேலி மாவட்டத்தில் எங்கு வாசிக்க வந்தாலும் கு. அழகிரிசாமியும், இராஜநாராயணனும் போகாமல் இருக்கமாட்டார்களாம். ஒரு முறை கோயில் திருவிழாவுக்காக வந்திருந்தாராம். அவ்வூர் இடைச்சேவலிலிருந்து 12 மைல் தூரமாம். இருவரும் 12 மைல் நடந்து போய் இரவு முழுவதும் இருந்து கேட்டு விட்டு வந்திருக்கின்றனர். அந்த விழாவில் நடந்த நிகழ்ச்சி: சுவாமி புறப்பாட்டிற்கு முன்பே கச்சேரியை தொடங்கிவிட்டாராம். கச்சேரி சூடுபிடிக்கும் நேரத்தில், சுவாமி புறப்பாடு ஆரம்பமாகி விட்டதாம். உடன் வேட்டு போட்டு அறிவிப்பது அக்கால வழக்கு. வேட்டு வந்ததைக் கேட்டு பதறிப்போன இராஜரத்தினம் பிள்ளை, வாசிப்பதை அப்படியே நிறுத்திவிட்டாராம். நாகசுரத்தை வைத்துவிட்டு மக்களை பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்திருக்கிறார். கு. அழகிரிசாமியும், கி. ராவும் வேட்டு போடுபவனிடம் சென்று 'நிறுத்து, நிறுத்து' என்று கத்தியவுடன் அவன் நிறுத்திவிட்டானாம். இருவரும் சேர்த்து 'வேட்டை நிறுத்தியாச்சு நீங்க வாசிங்கோ'' என்றவுடன் இராஜரத்தினம் பிள்ளை தொடங்கினாராம்.

**இராஜரத்தினம் பிள்ளை கார்:** நாகசுர வித்வான்களிலேயே முதலில் கார் வாங்கியவர் டி.என். ஆர்தான் ஹாட்சன், போன்டியாக் என்று இரு வெளிநாட்டுக்காரர்கள் வைத்திருந்தார்.

அக்காலத்தில் சங்கீத வித்வான்கள் எல்லாம் நாய் வளர்க்கும் பேஷன் இருந்த நேரம். டி.என்.ஆரும் நாய், 2 மயில்கள், புறாக்கள், மான் முதலியவற்றை செல்லப்பிராணிகளாக வளர்த்து வந்திருக் கிறார்.

**குடியரசு தலைவர் விருது:** 1954-ஆம் ஆண்டு டி.என்.ஆரின் இசை சேவையைப் பாராட்டி அவருக்கு குடியரசுத்தலைவரின் விருது வழங்கப்பட்டது. விருதைப் பெற்றுக் கொள்ள தில்லி சென்றார். நாகசுர மேதையை அழைத்து வருவதற்கு பொறுப்பாளர்கள் 'வேன்' அனுப்பியிருந்தனர். டி.என்.ஆர். கனாட் பிளேசில் உள்ள மெரினா ஓட்டலில் தங்கியிருந்தார். மாடியிலிருந்து வேனைப் பார்த்தார். வேனில் நாலைந்து பேர் ''வேனைப் போகச் சொல்லுங்கள். நல்ல பிளசர் வந்தால்தான் வரமுடியும்'' என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார். பின்னர் கார் வந்தவுடன் தான் சென்றார். அரங்கத்திற்கு சென்றவுடன் செயலாளர் திருமதி. நிர்மலா ஜோஷி ''என்ன வாசிக்க போகிறீர்கள்'' என்று அதிகார தோரணையில் கேட்டவுடன் பிள்ளைவாள் அதே தோரணையில் ''தோடி' என்று சொல்லு'' என்றார். ஆனால் அரங்கில் அவர் வாசித்தது கல்யாணி! கீர்த்தனை அமைப்பு ரொம்ப அற்புதமாய் இருந்ததால் ''என்ன கீர்த்தனை பிள்ளைவாள்?'' என்றேன். ''வாத்தியத்துக்கு சாகித்யம் என்ன தம்பி, சரவணபவனேன்று வச்சுக்க. சரியா வந்தா ஒத்துக்க'' என்று சொன்னதை சுப்புடு எழுதியுள்ளனர்.

குருநாதர் குடியரசு தலைவர் விருதினை பெற்றதை கொண்டாடுவதற்கு, காருக் குறிச்சியிலேயே ஒரு விழாவை ஏற்பாடு செய்தார் காருக்குறிச்சியார். விழா நிகழ்ச்சி முடிந்தவுடன் இருவரும் இணைந்து மூன்று மணி நேரத்திற்கு மேல் நாகசுர இசையை ரசிகர்களுக்கு வழங்கி சிறப்பித்திருக்கின்றனர்.

**இசை ஆராய்ச்சி:** சென்னைக்கு வரும் போதெல்லாம் டி.என்.ஆர். மறக்காமல் வில்லிவாக்கம் சென்றுவிடுவார். அங்குதான் திருநாவுடையார் வேலூர் டி.எம்.அப்பாதுரை ஆச்சாரியாரின் குமாரரும், இசை பேராசிரியருமான டி.ஏ. சம்பந்தமூர்த்தியாரை சந்திப்பார். இசையில் மகாவல்லுனர். சம்பந்தமூர்த்தியார் வீட்டு மாடியில் 'இசை ஜமா' கூடிவிடும். அபூர்வமான ராகங்களைப் பற்றி அவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்வார். டி.என். ஆருக்கு வலக்கை போல் இருந்தவர் அவர். தாம் வாசிக்கும் கீர்த்தனைகள் நன்றாக இருக்க வேண்டும் என்கிற ஆசையில் தேர்ந்தெடுத்த சிலரிடமே சென்று, தேர்வு செய்த கீர்த்தனைகளை பாடாந்தரம் செய்து கொள்வாராம் டி.என்.ஆர்.

திருவாவடுதுறையாரைப் பற்றி டி.ஏ. சம்பந்தமூர்த்தி ஆச்சாரியாரின் நினைவுக் குறிப்புகள்: ''ஏறக்குறைய இருபது

ஆண்டுகளுக்கு முன்பு என்னுடைய கச்சேரியை திருவாவடுதுறை அவர் இல்லத்திலேயே டி.என்.ஆர். கேட்கிற வாய்ப்பு கிடைத்தது. இந்த வாய்ப்பினை ஏற்படுத்தியவர்கள் நாதஸ்வரமணி. கக்காயி அவர்களும், தேவார மணி சிதம்பரம் எம். கனகசபைபிள்ளை அவர்களும் ஆவார்கள். அது சமயம் நான் பாடிய அபூர்வ ராகங்களை மிகவும் ரசித்ததோடு அல்லாமல், பாடிய அத்தனை அபூர்வ ராகங்களை குறித்து இடைஇடையே கச்சேரியை நிறுத்தச் செய்து சோதித்தறிந்து மேலும், மேலும் இசைத்துறையில் ஊக்குவிக்கச் செய்தார்.

மற்றொரு சமயம் ''கரகரப்பிரியா மேளத்திலே ஆரோஹணத்தில் சம்பூரணமாகவும், அவரோகணத்தில் மூன்று ஸ்வரங்களும் வரக்கூடிய முறையில் ஒரு மெட்டு அமைத்துத்தருவீரா?'' என்றார். அதன்படியே சரிகமபதநிச் சபமச (சம்பூர்ண திஸ்ராந்தத்தில்) 'சேமக்கோமள' என்கிற பாடலுக்கு ஏற்றபடி மிஸ்ரத்தில் அமைத்துத் தந்தேன். அதன்பின் அவர்தம் வாத்தியத்தில் அம்மெட்டை மேலும் பரிமளிக்கச் செய்தார். இன்றும் நாதஸ்வர



படத்தில் படுத்திருப்பவர் சம்பந்த மூர்த்தியார் வலதுபுறம் முன்னால் உட்கார்ந்திருப்பவர் டி.என்.ஆர்., மற்றவர்கள் திருவெண்காடு சுப்பிரமணியப் பிள்ளை, கக்காயி நடராஜ சுந்தரம் பிள்ளை, சிதம்பரம். கணகசபை பிள்ளை, திருக்களர் சுந்தரேச தேசிகர், D. சோமசுந்தர தேசிகர், கல்யாண சுந்தரேசதேசிகர்

இசைமணி குளிக்கரை பிச்சையப்பா அவர்களிடமும் அம்மெட்டை கேட்டு இன்புறலாம். என்னுடைய இசைப்பாடல்களை உள்ளவாறு வாசிப்பதில் திரு. பிச்சையப்பா ஓர் அதகன். நாதஸ்வர மேதை டி.என்.ஆர். அருமை மைத்துனர் நாதஸ்வர திவாகர் திருவெண்காடு டி.வி. சுப்பிரமணிய பிள்ளை அவர்களுடன் ஒன்று சேர்ந்து திருச்சி வானொலி நிலையத்தில் என் சொந்த இசை அமைப்பில் சிந்து பைரவியில் 'அமுதுமூறு' திருப்புகழை வாசித்த பாணியை இன்றும் என்னால் மறக்க முடியவில்லை'. திருவெண்காட்டார் எந்த மெட்டையும் கேட்டவுடனேயே வாசிக்கும் திறமை உடையவர்.

திரு.டி.என்.ஆர். அவர்களைப் பாராட்டி அவர் மீது வர்ணம் ஒன்று இயற்றி சென்னை பெரம்பூர் சங்கீத சபாவின் சார்பில் தந்து இருக்கிறேன். அதற்கு விலையுயர்ந்த பொன்னாடையையும் பொருளையும் தந்து என்னை மிகவும் பெருமைப்படுத்தினார்'' என்று ''தாளஏரி'' நூலில் (1974) தெரிவித்துள்ளார்.

டி.ஏ. சம்பந்தமூர்த்தியாரின் 'இசைவாரிதி' நூலுக்கு டி.என்.ஆர். கொடுத்த முன்னுரை: ''சங்கீத வித்வான் திரு.டி.ஏ. சம்பந்தமூர்த்தி ஆச்சாரியார் அவர்கள் புதிய ராகங்களில் பாடல்களை இசை இலக்கண அமைப்போடு அமைந்திருக்கிறார். சங்கீத உலகில் அனைவருக்கும் எளிதாகப் பயன்படும்.

திரு. சம்பந்தமூர்த்தி ஆச்சாரியாரவர்கள் சங்கீதத்தில் எந்தக் காரியத்தை எடுத்தாலும் யாரும் அதில் குற்றங்குறைகள் கூறவும் முடியாது. காணவும் முடியாது. அவர் தனிச்சிறப்பு வாய்ந்தவர்.

தமிழ்நாடு செய்த பாபத்தின் காரணமாக அவரைப் பிரயோசனப்படுத்திக் கொள்ளவில்லை. அவர் ஒரு ஆரியராகப் பிறக்காமல் இருப்பதினால்தான் என நினைக்கிறேன். அவர் எடுத்துக் கொண்டிருக்கிற இந்த நற்பணிக்கு கடவுளும் அருள்புரிவ தோடு தேசமக்களும் உதவிபுரிவார்களாக'' என்று 6.5. 56 எழுதிய முன்னுரையில் தெரிவித்துள்ளார்.

டி.ஏ. சம்பந்தமூர்த்தியாரின் இசை ஆய்வுகள் அனைத்தும் ஆப்ரகாம் பண்டிதர், மதுரை பொன்னுசாமி நாயனக்காரரின் ஆய்வுகளை அடியொட்டி வளர்ந்தவை. மேளகர்த்தா ராகங்கள் 72 என்பது ஊழல். 32 தான் தமிழருக்கானவை என்ற கருத்தில் டி.என்.ஆர். ஊன்றிநிற்பதற்கு டி.ஏ.எஸ். ஆச்சாரியாரே காரணம் ஆவார்

**நாகசுரமும் - ஷெனாயும்:-** காசிக்கு டி.என்.ஆர். சென்றிருந்த போது உஸ்தாத் பிஸ்மில்லாகான் வீட்டிற்கு சென்றிருக்கிறார் நல விசாரிப்புகள் எல்லாம் முடிந்த பின்னர், டி.என்.ஆர். சொன்னாராம். நாமிருவரும் ஏன் அவரவர் வாத்யங்களை மாற்றிக்கொண்டு வாசித்துப் பார்க்கக் கூடாது! என்று.

ஷெனாயை எடுத்துக் கொடுத்தாராம் உஸ்தாத். ஷெனாயிக்கு சீவாளி பனை ஓலையில் செய்யப்படும். வாசிப்பதற்கு கடினமாக இருந்தபோதும் டி.என்.ஆர். ஹிந்தோளத்தை அற்புதமாக வாசித்தாராம்.

உஸ்தாத் நாகசுரத்தை வாசிக்க திணறி திரும்பக் கொடுத்து விட்டாராம் - தன் தோல்வியை ஒப்புக்கொண்டு. டி.என்.ஆர். அருகிலிருந்த தவில் வித்வான் ராகவப் பிள்ளையிடம் 'ராகவா, என்ன ஒப்புக் கொள்கிறாயா? நான் சக்ரவர்த்தி என்று! உடனே பிஸ்மில்லாகான். ''உமக்கு சந்தேகமே வேண்டாம் நீங்கள் சக்கரவர்த்திதான்'' என்றாராம்.

## டி.என்.ஆர். வாழ்வில் / சுவையான நிகழ்ச்சிகள்:

### வாசிக்காத அருமை



செம்பொன்னார் கோவில் இராமசாமிப் பிள்ளை

சீர்காழி சட்டநாதர் கோயிலில் குடமுழுக்குக் கொண்டாட்டம். அந்த கோயில் தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்தது. எனவே 'ஆதீனமேள'மாக செம்பொன்னார் கோயில் சகோதரர்கள் வந்திருந்தார்கள். மற்றும் திருவீழி மிழலைச் சகோதரர்கள், கீரனூர்ச் சகோதரர்கள் திருவிடைமருதூர் வீருசாமிபிள்ளை, டி.என்.ஆர். முதலியோர் சிறப்பு மேளமாக வரவழைக்கப் பட்டிருந்தனர். டி.என்.ஆரின் தோடி கேட்க ஏராள மான மக்கள் குவிந்து விட்டனர். இதைப் பொறுக்காத ஒரு நாகசுரக்காரர் செம்பொன்னார் கோயில் சகோதரர்களில் பெரியவரான கோவிந்தசாமி பிள்ளையிடம், ''இராஜரத்தினம் வாசிப்பை கேட்க மக்கள் கூடியிருக்கிறார்கள். இந்த கூட்டத்தைப் பார்த்து அவர் ரொம்பவும் பெருமையில் இருக்கிறார்.

ஆதீனமேளமான தாங்கள் வாசியுங்கள். உங்களைத் தொடர்ந்து நாங்கள் வாசிக்கிறோம். இப்படியே விடியும் வரை வாசித்து இராஜரத்தினத்தை உறையிலிருந்து நாகசுரத்தை எடுக்காமல் செய்து விடலாம்.'' என்று தனது மேன்மையான கருத்தை சொன்னார்.

சக கலைஞரின் பொறாமை உள்ளத்தைப் புரிந்து கொண்ட கோவிந்தசாமி பிள்ளை. 'பார்த்துக் கொள்ளலாம்' என்று சொல்லி விட்டு, ஆதீனமேளமாகதான் இருந்தும், வாசிக்காமலே, டி.என்.ஆரை. இரவு முழுவதும் வாசிக்கச் செய்தாராம். நிகழ்ச்சி முடிந்தவுடன் கோவிந்தசாமி பிள்ளையின் கையை பிடித்துக் கொண்டு டி.என்.ஆர். ''அண்ணா! நான் இவ்வளவு பாடுபட்டு விடிய விடிய வாசித்தது பெரியதில்லை; நீங்கள் வாசிக்காமல் விட்டீர்களே, அதன் பெருமைக்கு எது ஈடாகும்'' என்று உணர்ச்சிப் பெருக்குடன் கூறினார்.

**இந்தா பிடி வாசி!**

1940-ஆம் ஆண்டு இராமேஸ்வரம் கோயில் உத்சவத்திற்கு, கச்சேரிக்காக டி.என்.ஆர். சென்றிருக்கிறார். வெள்ளி ரத ஊர்வலம். முடிவில் தோடி இராக ஆலாபனையை தொடங்கி இழைத்து, இழைத்து மெருகூட்டி இசையன்பர்களை இன்ப வெள்ளத்தில் ஆழ்த்திக் கொண்டிருந்த சமயத்தில், ஒரு வன் ஓடி வந்து, இடையே புகுந்து ''மகுடி வாசியுங்கள்'' என்றானாம். அவர் அவனைப் பார்த்து, நீங்க ரொம்ப இசை தெரிந்தவர்களா தெரியுது. உங்களுக்கு மகுடிதான் வேணும், இந்தாங்க - இதை கொஞ்சம் பிடிங்கண்ணு அவரிடம் நாகசுரத்தை கொடுக்க, அவனும் ஏதும் புரியாமல் வாங்கியவுடன் ''நீயே வாசிச்சுக்கோ'' என்று சொல்லி விட்டு வெளியே போய்விட்டாராம். பின்னர் கோயில் அதிகாரி சமாதானம் செய்து அழைத்துவந்து வாசித்திருக்கிறார்.

**மாலியுடன் ஜாலி:** ஒரு முறை மாலியைத் தேடி அவர் வீட்டிற்கு கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன் வந்தார். அவர் வந்தது, தன் மகளின் திருமணத்திற்கு மாலியின் கச்சேரியை ஏற்பாடு செய்ய. ஆனால் மாலி கலியாணக் கச்சேரிகளுக்கு வாசிப்பதில்லை. ஆகவே மாலி பிடி கொடுத்து பேசவில்லை. கிருஷ்ணனுடன் ஒரு முரட்டு ஆள் வந்திருந்தான். கூர்மையான கருட முக்கும் புஸ்தி மீசையுமாக ஆளைப்பார்த்தாலே டியாள் போலிருந்தது. முடியாது என்று மாலியால் அழுத்தம் திருத்தமாகச் சொல்ல முடியவில்லை.

ஏதேதோ காரணம் சால் ஜாப்பு சொல்லிப்பார்த்தார். கிருஷ்ணனும் விடுவதாக இல்லை. கடைசியில் அந்த அடியாள் எழுந்து திடீரென தன் மூக்கையும் மீசையையும் தடவினான். மூக்கும் மீசையும் கையோடு வந்துவிட்டன. வேஷம் கலைந்து நிற்பதுயார் என்று பார்த்த மாலிக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது அடியாள் வேஷத்தில் வந்திருந்தவர் டி.என்.ஆர். அடுத்த கணம் சூழல் மாறிவிட்டது. உடனே உற்சாக பானம் வரவழைக்கப் பட்டது. தன் நண்பருக்காக கல்யாண கச்சேரியை ஒத்துக் கொண்டார் மாலி.

டி.என்.ஆர். அதோடு நிறுத்தவில்லை. மாலியின் வாசிப்பைக் கேட்க வேண்டுமென்று ஆரம்பித்தார். சாதாரணமாக இதுபோன்ற வேண்டுகோள்கள் வந்தால் மாலி வாசிக்கவேமாட்டார். ஆனால் டி.என்.ஆருக்காக உடனே புல்லாங்குழலை எடுத்து பைரவி வாசித்து டி.என்.ஆரை அசத்திவிட்டார்.

நான் இந்த மாதிரி பைரவியைக் கேட்டதே இல்லைதம்பி. ''நீ அவுங்க ஆளு இல்ல! நம்மாளு!!'' என்றாராம்.

**விட்டது போ!** யாருக்கும் பயப்படாமல் தன் மனதில் பட்டதை பட்டென்று சொல்லிவிடும் சுபாவம் உடையவர் டி.என்.ஆர். ஒருமுறை புகழ்பெற்ற பழைய பாடகர் ஒருவர் இனிதான் பாடப் போவதில்லை என்று அறிவித்ததை டி.என்.ஆரிடம் தெரிவித்ததற்கு, அவர் சொன்னாராம். ''ஒரு அபஸ்வரம் விட்டது - போ!'' என்று செய்தி சொன்னவர் விக்கித்துப் போனாராம்.

### டி.என்.ஆரின் பெருந்தன்மை:

தருமபுரம் மடத்திற்கு வாசிக்கச் சென்ற போது, ஆதீன வித்வான்களான மாயவரம் சகோதரர்கள் அவரை வாசிக்க இடம் கொடுக்காமல் செய்திருக்கின்றனர். டி.என்.ஆர். கோபத்துடன் 'திருவாவடுறை வாருங்கள் பேசிக்கிறேன்'னுட்டு போய்விட்டார். அடுத்த சில மாதங்களிலேயே அவர்கள் திருவாவடுதுறை மடத்திற்கு வரவேண்டியதாயிற்று. அப்போது ஒரு பெரிய வித்வான் வாசித்துக் கொண்டிருந்தாராம். அவரிடம் மெதுவாக டி.என்.ஆர். 'நீ வாசித்து போர் அடித்தது போதும். பசங்க வாசிக்கட்டும்'' என்று பெருந்தன்மையுடன் சொன்னாராம்.

**டி.என்.ஆரின் சமயோஜித அறிவு:**

வீணை தனம்மாள் புகழ்பெற்ற இசைக்குடும்பத்தைச் சேர்ந்தவர். தாகூர் தமிழ் நாட்டிற்கு வந்த போது, தனம்மாள்தான் வீணை இசை வழங்கி அவரை தமிழிசையை உணர வைத்தவர். தனது சிஷ்யனான டி.என்.ஆர். வாசித்து வெளிவந்திருந்த இசைத்தட்டு பற்றி விமர்சனம் வந்திருந்த நேரம் அது. அது பற்றி விசாரிக்க எண்ணி, டி.என்.ஆரை கூப்பிட்டனுப்பி இருந்தார். இவரும் அங்கு சென்று அவருக்கு பிடித்தமான பலவித இராகங்களை வாசித்து ஆலாபனை செய்து கொண்டிருந்தார். தனது எழுபத்தெட்டாவது வயதிலும் டி.என்.ஆருக்காக தம்புரா போட்டு, நாகசுர இசையை கேட்டு விட்டு, கடைசியில் ''ஏண்டா, ராஜரத்தினம்! உன் தர்பாரில் நாயகியைக் கலந்து வாசித்து விட்டாயாமே?'' என்றார். அதற்கு டி.என்.ஆர். ''ஆமாங்க, ஒரு நாயகி இல்லாத தர்பார் எப்படி சோபிக்கும்? சொல்லுங்க?'' என்று சமத்காரமாக பதிலை தர டி.என்.ஆரைவிட வேறு யார் சொல்லமுடியும்?



வீணை தனம்மாள்

**டி.கே.சியும் - டி.என்.ஆரும்**

கிட்டப்பா இறந்து பல ஆண்டுகள் கழித்து குற்றாலத்திற்கு சாரல் நேரத்தில் டி.என்.ஆர். சென்றிருக்கிறார். டி.கே.சி, வீட்டில் இருப்பதைப் பற்றி கேள்விப்பட்டு மரியாதை நிமித்தம் பார்க்கச் சென்றிருக்கிறார். டி.கே.சியின் துணைவியார் சாப்பிட்டு விட்டுத்தான் போக வேண்டும் என்று சொல்ல, சாப்பிட்டுவிட்டு கிளம்ப எத்தனிக்கும் போது, ''இவ்வளவு தூரம் வந்து விட்டு எப்படி சும்மாய் போறது - வாசிச்சுட்டுத் தான் போகணும்''னு விடாப்பிடியாக பிடித்துக்கொள்ள, நான் நாகசுரம் கூட எடுத்துவரவில்லை என்று எவ்வளவோ சொல்லியும், டி.கே.சி குற்றால நாதர் கோவில் நாயனக்காரரை கூப்பிட்டனுப்பினார். அவர் வந்தவுடன் டி.என்.ஆருகே உரிய தோடியை வாசிக்க, டி.கே.சி. மெய்மறந்து போய் இருந்தார். பின்னர் டி.கே.சி. அண்ணாமலையாரின் காவடிச்சிந்தைப் பாட, அதற்கு டி.என்.ஆர். நாகசுரம் வாசிக்க அன்றிரவு முழுவதும் இந்நிகழ்ச்சி நடந்தது என்று தெரிவிக்கிறார்: இலஞ்சி சிவனணைஞ்ச தேவர்.

## மொட்டைத் தலையும் முழங்காலும்

''பிரபல வித்வான் தமது பிரதம சிஷ்யையின் வீட்டில் நடந்த கல்யாணத்துக்கு வருகை தந்திருந்தார். பிள்ளைவாளைப் பார்த்ததும் அந்த வித்வானுக்குப் பரம சந்தோஷம்.

''வாங்க பிள்ளைவாள், நான் செய்த பாக்கியம். நாலுநாள் இருந்து கல்யாணத்தை ஜோரா நடத்திக் கொடுத்துவிட்டுப் போகணும்'' என்றார்.

''அதற்கென்ன ஜமாய்ச்சுடுவோம்'' என்றார் பிள்ளை. அதோடு விட்டிருக்கலாம். அவர் போதாத வேளை மேலும் தொடர்ந்தார். ''எனக்கு ரொம்ப நாளா ஓர் ஆசை. இன்னிக்கு சாயந்திரம் நீங்களும்... பிள்ளைவாளும் சேர்ந்து வாசிக்கணும். இதுவரை யாரும் செய்யாத புதுமையை நீங்க பண்ணிக்காட்டணும் என்ற ஆசை எனக்கு'' என்றார்.

''பேஷா, அப்படியே செய்துடுவோம்'' என்றார் பிள்ளைவாள்.

பக்கத்தில் இருந்தவர்களுக்கெல்லாம் இது ஆச்சரியமாக இருந்தது. ஏனெனில் ராஜரத்தினம் பிள்ளை அவர்களுக்கு சுருதி இம்மி பிசகாது. சீவாளி பதமாகிற சமாச்சாரமே இவரிடம் கிடையாது. அதற்கு நேர்மாறாக... பிள்ளைவாளுக்குச் சூடுபிடிக்க நாழியாகும். காற்றுக்கு மெரினாவைத்தான் நம்பியிருந்தார் அவர். இத்தகைய சூழ்நிலையில் அன்னாரோடு வாசிக்க ராஜரத்தினம் பிள்ளை அவர்கள் எப்படி ஒப்புக்கொண்டார் என்பது எல்லாருக்கும் ஆச்சரியமாக இருந்தது.

அந்த சமயத்தில் பிரபல சினிமா பாடகர் ஒருவர் வருகை தந்தார். அப்போதெல்லாம் முன்னணி பாடகர்தான். பின்னணியே கிடையாது. காதுகளிலும் கைகளிலும் வைரக்கற்கள் மின்ன, சரிகை அங்க வஸ்திரத்துடன் அவர் காட்சி அளித்தார். பிரபல வித்வான் அவரைமுகமன் கூறி வரவேற்றார். ராஜரத்தினம் பிள்ளை அவர்களும் அகமும் முகமும் மலர, ''வா தம்பி வா, சவுரியமாயிருக்கியா?'' என்று கூறிவிட்டு, பிரபல வித்வான் பக்கம் திரும்பி, ''எனக்கு ஒரு நல்ல ஐடியா தோணுது. ஊர்வலத்துக்கு நீங்க சொன்னபடி நானும் அண்ணனும் ஜமாய்ச்சுப்பிடறோம். ராத்திரி நீங்களும் இந்தத் தம்பியும் சேர்ந்து கச்சேரி பண்ணிடுங்க; என்ன முழிக்கிறீங்க? தம்பிக்கு என்ன குறைச்சல்? உம்ம பாட்டைக் கேட்க ஆயிரம் பேர் வராங்கன்னா, தம்பி பாட்டைக் கேட்க

லட்சலட்சமாய் வராங்க. உம்ம இடத்தை பூர்த்தி செஞ்ச மாதிரியும் ஆச்சு, என் இடத்தை நீங்க பூர்த்தி செஞ்ச மாதிரியும் ஆச்சு'' என்றதும் பிரபல வித்வான் முகத்தில் ஈயாடவில்லை.

## அடி மொட்டை!

நாகபட்டிணத்தில் ஒரு நாதஸ்வர வித்வான். அவர் கையில் நாதஸ்வரம். வாசிப்பில் அபஸ்வரம். ஆனால் வேஷத்தில் ராஜரத்தினம் பிள்ளை அவர்களை அப்பட்டமாகக் காப்பியடித்துக் கொண்டிருந்தார். அவர் குடுமி வைத்துக் கொண்டிருந்தார். அவரோடு இவரும் கிராப்புத் தலையானார். அதே ஜொலிப்புக் கடுக்கன்கள், அதே டால் வீசும் மோதிரங்கள், போதாக் குறைக்கு 'ஏகலைவன் மாதிரி அண்ணாச்சியை மனசிலே வச்சுக்கட்டு வாசிக்கிறேன்'' என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

அத்துடன் நிற்காமல் ராஜரத்தினத்துக்கு நாதஸ்வரம் செய்து தரும் ஆசாரியைப் பிடித்து, அவருடைய வாத்தியத்தின் பிரத்தியேக அமைப்பையும் கேட்டுத் தெரிந்து கொண்டார். அத்துடனாவது நிறுத்திக் கொண்டிருக்கலாம். 'அண்ணாச்சி வாத்தியம் இருப்தேழு இஞ்ச்சுதானே. என்னுடைய வாத்தியத்தை இருபத்தெட்டரை யாகப் பண்ணிவிடு!'' என்று வேறு சொல்லி வைத்தார். இது எப்படியோ பிள்ளைவாளின் காதுக்கு எட்டிவிட்டது. அவரை எப்படியாவது மட்டம் தட்ட வேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டார். கொஞ்ச நாள் கழித்து ராஜரத்தினம் பிள்ளை நாகப்பட்டிணம் போக வேண்டிய சந்தர்ப்பம் வாய்த்தது. அங்கே ஒரு கச்சேரி. போன உடனேயே உள்ளூர் நாதஸ்வரத் தம்பிக்குச் சொல்லியனுப்பினார். தம்பிக்கு ஒருபுறம் சந்தோஷம். இன்னொரு புறம் பயம். ஒருவாறு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு ராஜரத்தினத்தின் முன் தயங்கி தயங்கி நின்றார்.

''என்ன தம்பி, சவுக்கியமாயிருக்கியா?''

''இருக்கேன், உங்க ஆசீர்வாதம்''

''அசப்பிலே பார்த்தா என்னை மாதிரியே இருக்கே. என்னைப் போலவே ஊதறியாமே? பேஷ், பேஷ். யாருக்கிட்டே பாடம்?''

''உங்களையே குருவா மனசிலே எண்ணிக்கிட்டேனுங்க. கேட்கப் போனா இந்த வட்டாரத்திலே என்னை எல்லோரும் 'சின்ன ராஜரத்தினம்'னுதான் சொல்லுவாங்க. எல்லாம் உங்க ஆசீர்வாதம்!''

''அது சரி, நீ என்னவோ ஆசாரிக்கிட்டே உன் வாத்தியத்தை இன்னும் கொஞ்சம் நீளமாச் செய்யச் சொன்னாயாமே. என்ன ரகசியம் அதிலே?''

''அதெல்லாம் ஒண்ணுமில்ல. மந்தர ஸ்தாயியை இன்னும் கொஞ்சம் அழுத்தமாப் பேச வைக்கலாம்னு ஓர் இஞ்ச் கூடுதலா பண்ணச் சொன்னேனுங்க''

''அது போவட்டும். டிரஸ், கிரஸ், ஆபரணங்கள் எல்லாம் என்னைப் போலவே போட்டுக்கிட்டு இருக்கியே?''

உள்ளூர்த் தம்பி ஓர் அசட்டுச் சிரிப்பு சிரித்தார். தம்பிக்கு நிறைய காப்பி, பலகாரம் வாங்கிக் கொடுத்த பின், இருவரும் ஒரு காரில் ஏறி வெளியே போனார்கள். ராஜரத்தினம் டிரைவரை விளித்து, ''நேரே சலூனுக்கு ஓட்டப்பா!'' என்றார். கார் சலூன் போய்ச் சேர்ந்தது. தாம் ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு உள்ளூர்த் தம்பியைப் பக்கத்து நாற்காலியில் உட்காரச் சொன்னார். தம்பிக்கு பகீரென்றது. ''என்ன விபரீதம் நடக்குமோ?'' என்று தயங்கினார்.

''சும்மா உட்காருப்பா!'' என்றதும் தயங்கித் தயங்கி நாற்காலியில் ஏறி உட்கார்ந்திருந்தார். முடி திருத்தும் கலைஞரைப் பார்த்து, ''இரண்டு பேருக்கும் மொட்ட அடி, திருப்தி ஸ்டைலில்!'' என்றார். உள்ளூர்த் தம்பி அலறி, ''என்னங்க இது, நான் என்ன தப்பு செய்தேன்?'' என்று கதறியே விட்டார். ''பின்னே என்னவென்று நினைச்சுக்கிட்டே? எல்லாத்திலேயும் நீ என்னைக் காப்பியடிக்கிறே. நான் கடுக்கன் போட்டா நீ கடுக்கன் போடறே. நான் தோடா போட்டா நீயும் தோடா போடறே. கழுத்துச் சங்கிலியிலே பாதியை ஜிப்பாவுக்கு வெளியே எடுத்து விட்டுக்கிறே. கட்டுக்குடுமி வச்சுக்கிட்டா கட்டுக்குடுமி வச்சுக்கிறே. கிராப்பு வச்சிக்கிட்டா கிராப்பு வச்சிக்கிறே. வாத்யம் பண்றதிலே என்னை ஒரு படி மிஞ்சி ஒன்றரை இஞ்ச் கூட வைச்சு ஆர்டர் பண்றே. 'நான் இப்ப மொட்டை அடிச்சுக்கப் போறேன். நீயும் அடிச்சுக்க!'' என்றார். தம்பிக்கு புத்தி வந்து சரணாகதி அடைந்தபிறகுதான் சலூனை விட்டு வெளியே வந்தார்'' என்று எழுதியுள்ளார் சுப்புடு.

**கனகாபிஷேகம்:**




செம்பை வைத்தியநாத பாகவதர்

முன்னணிக் கலைஞர்களாலே கௌரவிக்கப்பட்டவர் டி.என்.ஆர். இவரை அழைத்து பாலக்காட்டு சங்கீத சபையில் கச்சேரிக்கு ஏற்பாடு செய்தார் செம்பை வைத்தியநாத பாகவதர். டி.என்.ஆர். கச்சேரியில் வாசித்த காம்போதி ராக ஆலாபனையை ரசிகர்கள் பெரிதும் ரசித்து புகழ்ந்து கொண்டே இருந்திருக்கின்றனர். இதைக் கண்ட செம்பை 'சும்மா புகழந்துகொண்டு இருக்கக் கூடாது. ஆயிரம் ரூபாய் நோட்டுகளாக மாற்றி வந்து தரவேண்டும்' என்றிருக்கிறார். பணம் தந்தவுடன், அவற்றால் டி.என்.ஆருக்கு கனகாபிஷேகம் செய்தாராம் செம்பை.

**போதை தந்த சோகம்:**

1940 ஆம் ஆண்டு தொடக்கம் முதலே போதைப் பழக்கம் டி.என்.ஆருக்கு தொற்றிக் கொண்டது. அக்காலத்தில் முன்னணிக் கலைஞர்களான புல்லாங்குழல் மாலி, மகாராஜபுரம், டைகர் வரதாச்சாரி போன்றோரும், இதனிடமிருந்து தப்பவில்லை. போதை காரணமாக தாமதமாக திருவாங்கூர் சமஸ்தானத்திற்கு சென்றதால் ஆஸ்தான பதவி கிடைக்காமல் போயிற்று. பம்பாயில் கல்லடி பட்டிருக்கிறார். அம்பலப்புழையில் நினைவு வராமல் நிகழ்ச்சி ரத்தானது மலையாள இதழ்களில் வெளிவந்திருக்கிறது. நாஞ்சில் நாட்டில் வாசிக்கப் போய் 'பீபி' என்ற ஒலியை தவிர வேறு ஒலி அரைமணி நேரம் வராததால் 'இன்றுபோய் நாளை வருக' என்று பொதுமக்களே அனுப்பியிருக்கின்றனர். இதுபோன்ற நிகழ்ச்சி களுக்குப் பிறகு அந்த ஊராரே பாராட்டும் அளவுக்கு அடுத்த நாள் வாசித்து புகழை தக்கவைத்துக் கொண்ட திறமையாளராகவும் இருந்திருக்கிறார் ''புத்திர சம்பத்து இல்லாதாலே ஆரம்பிச்சதுங்க இந்தப் பழக்கம். இதனால எவ்வளவோ இழந்துட்டேன்'' என்று ஒரு பத்திரிகையாளரிடம் இறுதிக் காலத்தில் தெரிவித்தும் இருக்கிறார்.



**பாராட்டுக்களை எல்லாம்விட உயர்ந்தது!**

ஒருநாள் டி.என்.ஆருக்கு திருமணக் கச்சேரி. முதல் நாள் மாப்பிள்ளை அழைப்பு, அதற்காக அந்திமேளமாக கல்யாணியை எடுத்துக்கொண்டுராக ஆலாபனை செய்துகொண்டு வந்தார். ஊர்வலம் சென்றுகொண்டே இருந்தது. அடுத்த ராகத்தை வாசிக்கத் தொடங்கிய உடனே 'இதோ தோடி'யை பிடிச்சுட்டாருங்க' என்ற குரலைக் கேட்டு டி.என்.ஆர். திரும்பிப் பார்த்தவுடன் அந்தக் குரலுக்கு உரியவராக இருந்தவர் திருமணத்திற்கு கியாஸ் லைட் தூக்கி வருபவர் புன்முறுவல் பூத்திருக்கிறார். இந்நிகழ்ச்சியை கல்கியிடம் சொல்லி, சொல்லி மாய்ந்திருக்கிறார். ''என்னை எவ்வளவோ பேர் புகழ்ந்து பாராட்டியிருக்காங்க. ஆனா அன்னைக்கு அந்த 'லைட்காரன்' என் தோடியை புரிஞ்சுக்கிட்டு சொன்னான் பாருங்க, அதுக்கு ஈடு எதுவும் ஆகாதுங்க'' என்ற டி.என்.ஆரின் கலை மனதை அறியும் அற்புதமான நிகழ்ச்சி இது.

**டி.என்.ஆருடன் வாசித்த கலைஞர்கள்:**

டி.என்.ஆருடன் இணைந்து நாகசுரம் வாசித்த கலைஞர்கள் திருவெண்காடு சுப்பிரமணிய பிள்ளை, திருவிடைமருதூர் வீருசாமி பிள்ளை, மருமகன் கக்காயி நடராஜசுந்தரம், குளிக்கரை

பிச்சையப்பா, காருக்குறிச்சி அருணாச்சலம், சூரியனார் கோயில் நாராயணசாமி நாகசுரக்காரர் முதலியோர். தவிலிசைக் கலைஞர்கள்: அம்மாசத்திரம் கண்ணுச்சாமிபிள்ளை, நீடாமங்கலம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, மலைக்கோட்டை பஞ்சாபகேச பிள்ளை, பந்தணைநல்லூர் ரத்தினம் பிள்ளை, திருமங்கலம் சுந்தரேச பிள்ளை, கும்பகோணம் தாதக்கிருஷ்ணன், கும்பகோணம் தங்கவேல் பிள்ளை, நாச்சியார்கோயில் ராகவப் பிள்ளை, நீடாமங்கலம் சண்முகவடிவேல், யாழ்ப்பாணம் தட்சிணாமூர்த்தி முதலியோர்.

**நாகசுரச் சக்கரவர்த்தியும் நடிப்புச் சக்கரவர்த்தியும்:**

நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அவர்கள் டி.என்.ஆரை மீது, தான் நாடக மன்றத்தில் இருந்த காலத்திலேயே நிரம்ப மரியாதை வைத்திருந்தார். பின்னர் ''தில்லானா மோகனாம்பாள்'' திரைப் படத்தில் வரும் சண்முகசுந்தரம் நாகசுரக்காரர் பாத்திரத்தில் நடித்தபோது, ''டி.என்.ஆரை மனதில் வைத்துக்கொண்டுதான் நடித்தேன். அவர் வாசிக்கும் முறை, உட்கார்ந்து இருக்கும் கம்பீரம்



முதலியவற்றை என் நடிப்பிலும் பார்க்கலாம்'' என்று அவரே ஒரு பேட்டியில் தெரிவித்தும் இருக்கிறார். நடிகர் திலகத்தின் நடிப்பை சில படங்களில் பார்த்திருந்த டி.என்.ஆர். அவரை 'ராணி லலிதாங்கி' படத்தில் நடித்துக் கொண்டிருக்கும்போது நேரே சென்று பாராட்டினாராம். 'கற்றாரை கற்றாரே காமுறுவர்'' என்பதற்கு எடுத்துக்காட்டாக புகைப்படமும் இருக்கிறது.

**இறுதிக்காலக்கட்டம்:**

*1954* ஆம் ஆண்டு முதல் டி.என்.ஆர். சென்னைக்கு வந்துவிட்டார். வறுமை வாட்டி எடுத்த நேரம் இக்கால கட்டம்தான். டி.என்.ஆருக்காக கலைவாணரும், நடிகவேளும் நாடகம் நடத்தி பொருள் சேர்த்துக் கொடுத்தனர். அவ்வப்போது பாலசரஸ்வதி, டி. சங்கரன் போன்றவர்கள் நேரில் வந்து நலம் விசாரித்ததும், உதவிகளும் செய்து வந்த நேரம்.

சென்னை தாசப்பிரகாஷ் ஓட்டல் உரிமையாளர் திரு.ஆர்.சீதாராமராவும், நிர்வாகிகளும் ஓட்டலில் டி.என்.ஆர். இலவசமாக தங்கிக்கொள்ள வசதிகள் செய்து கொடுத்திருந்தனர். அப்போது ஒருநாள் கான்சாகிப் படே குலாம் அலிகான் அதே ஓட்டலில் தங்கியிருந்தாராம். ராஜரத்தினம் பிள்ளையை சந்திக்கும் ஆசையில் கான்சாகிப், ஜி.என்.பி.யை அழைத்துக்கொண்டு டி.என்.ஆர். அறைக்குச் சென்றாராம். நலம், விசாரிப்புகள் முடிந்தவுடன் கான்சாகிப்பை பாடச் சொல்ல, அவர் அரைமணி நேரம் 'மாண்ட்' ராகத்தில் அற்புதமாக பாடினாராம். அவர் பாடி முடித்தவுடன் ராஜ்ரத்தினம் பிள்ளை அதே ராகத்தை நாகசுரத்தில் இரண்டு மணி நேரம் வாசிக்க படேகுலாம் கான்சாகிப்பும், ஜி.என்.பி.யும் வியந்து போய் கேட்டுக் கொண்டிருந்தார்களாம்.

**இறுதி ஆசை:**

டி.என்.ஆருக்கு தாமும், கொடுமுடி கோகிலம் கே.பி. சுந்தராம்பாளைப் போல சட்டசபை உறுப்பினராக வேண்டும் என்று பெரிதும் ஆசை! மீ.ப. சோமுவுடன் ராஜாஜியை சந்தித்து தமது விருப்பத்தை தெரிவித்திருக்கிறார். அவரும், கோரிக்கையை ஏற்றுக்கொண்டு எம்.எல்.சி. ஆக்க இருந்த நேரத்தில் இயற்கை எய்திவிட்டார் டி.என்.ஆர்.

**கடைசி நிகழ்ச்சி:**



திருப்பாம்பரம்
சுவாமிநாதப் பிள்ளை

1956 ஆம் ஆண்டு அக்டோபர் 18 ஆம் நாள், சென்னை மயிலாப்பூரில் புல்லாங்குழல் மேதை திருப்பாம்புரம் சாமிநாத பிள்ளை கட்டிய இல்லத்தில், புதுமனை புகுவிழாதான் டி.என். ஆரின் கடைசி இசை நிகழ்ச்சி. அன்று கச்சேரி பிரமாதமாக இருந்ததாம்.

56 ஆம் ஆண்டு முழுவதும் உடல் நலக் குறைவுடனே இருந்திருக்கிறார். மருத்துவர்கள் எவ்வளவோ சொல்லியும் கேட்காமல் சாதகம் செய்து வந்தார். அந்நேரத்தில் செம்மங்குடி சீனிவாசய்யர் டி.என்.ஆரைப் பார்த்து இப்போது கூட 'சாதகம்' செய்ய வேண்டுமா, சும்மா இருக்கக் கூடாதா? என்று கேட்டதற்கு 'சாதகம்' செய்வதால்தான் நான் இராஜரத்தினம்! இல்லையென்றால் வெறும் 'கழுதை ரத்தினம்' என்று சொல்லியிருக்கிறார்.

**தோடிராகம் காற்றில் கலந்தது!**



1956 டிசம்பர் 12 ஆம் தேதி காலை டி.என்.ஆருக்கு மாரடைப்பு என்று கேள்விப்பட்டு அவரைப் பார்க்க, நெருங்கிய நண்பர்களான கலைவாணர் என்.எஸ். கேயும். நடிகவேள் எம்.ஆர். ராதாவும் வந்திருக்கின்றனர். ஜிப்பாவைப் போடுவதற்காக கைகளிரண்டை யும் உயரேத் தூக்கினார். அடுத்த நிமிடமே அவர் உயிர் பிரிந்துவிட்டது.

அடையாறு வீட்டிலிருந்து மயிலாப்பூர் சுடுகாடுவரை அவரது உடலைப் பின்பற்றிச் சென்ற இசைக் கலைஞர்கள், நடிக நடிகையர், ரசிகர்கள்

கூட்டம். அவர் இசைத்த இசைத்தட்டுகள் ஒலிபரப்பப் பட்டது. பின்னர் அரசு மரியாதையுடன் எரியூட்டப்பட்டது.

அக்பர் அவையில் இருந்த 'தான்சேன்' என்ற இசைக் கலைஞனை வரலாற்றாசிரியன் அபுல்பாசல் எழுதும்போது ''இவனுக்கு முன்னேயும் சரி, இனி வரப்போகிறவர்களும் தான்சேனுக்கு ஈடாக மாட்டார்கள்'' என்றான். இக்கூற்று டி.என்.ஆருக்கும் பொருந்தும்.

**இராஜரத்தினம் பிள்ளையின் ஆளுமை:**

''கிராப் தலையுடன், கண்ணாடி அணிந்துகொண்டு வைரக் கடுக்கன் காதுகளில் ஜொலிக்க, வாயில் வெற்றிலை பாக்கைக் குதப்பிக் கொண்டே சிரித்த முகத்துடன் கச்சேரி மேடைகளில் அவர் நாதஸ்வரத்தைக் கையில் எடுப்பதே மிகவும் அலாதியானது'' என்கிறார் குழலிசை கலைஞர் டி.ஆர். நவநீதம்மாள்.

டி.என்.ஆர். தன் இசைக்கருவியில் பெற்ற பயிற்சியே எந்த இசைவாணருக்கும் தான் தாழ்ந்தவரல்ல என்ற தன்னம்பிக்கையை அவரிடம் ஏற்படுத்தி இருந்தது. தன் இசையை மதித்தவர்களை இவரும் மதித்திருக்கிறார். மதிக்காமல் பரிசு மட்டுமே கொடுக்கக் கூடியவர்களிடம் இவர் தள்ளியே நின்றிருக்கிறார். அவர் நினைத்திருந்தால் எந்த சமஸ்தானத்து ஆஸ்தான வித்வானாகவும் ஆகியிருப்பார். தன்னை வளர்த்த திருவாவடுதுறை ஆதீனத்தை எதிர்த்துவிட்டு சென்னை வந்து விட்டவர், அங்கிருந்த நாட்களில் கூட மிகப் பெரிய வீட்டை கட்டி மடத்து கட்டிடங்களுக்கு சமமாக வாழ்ந்தவர்.

மைசூர் தசரா விழாவுக்குச் சென்றால், மன்னர் யானை மீது பவனி வருவார். நாகசுரக்காரர்கள் நின்றுகொண்டு நடந்து வாசித்து வரவேண்டும். இதற்காகவே பலமுறை அழைத்தும் மைசூர் சமஸ்தானத்திற்கு செல்லாமல் இருந்தார். வலிந்து அழைத்தபோது, மைசூர் சாமராஜ உடையாரைப் போலவே மடிப்புத் தலைப்பாகை, ஷெர்வானி உடை, ராஜாக்கள் அணியும் கட்ஷூவுடன் மகாராஜா வுக்கு இணையாக மேடையில் அமர்ந்து தர்பார் ராகம் வாசித்தவர்.

அக்காலத்தில் தமிழகத்திலிருந்த எல்லா ஊரிலும், கோவில் களிலும், செட்டிநாடு, புதுக்கோட்டை, சிவகங்கை, இராமநாதபுரம், எட்டையபுரம், திருவாங்கூர், கொச்சி, சமஸ்தானங்களிலும் தனது இசை மழையை பொழிந்தவர்.

மறைந்த இசை மேதைகள் பாலக்காடு, மதுரை மணி அய்யர்கள், ஜி.என்.பி., பிடில் இராஜமாணிக்கம் பிள்ளை, திருவாலங்காடு சுந்தரேச அய்யர், கிட்டப்பா, தியாகராஜ பாகவதர், புதுக்கோட்டை தட்சிணாமூர்த்தி பிள்ளை, மாலி, சித்தூரார், மதுரை சோமு, வீணை பாலச்சந்தர், கோட்டு வாத்தியம் சாவித்திரி அம்மாள், மகாராஜபுரம் விஸ்வநாத அய்யர் போன்றவர்களாலேயே வியந்து பாராட்டப் பட்டவர்.

மேலும் கல்யாணி, சண்முகப்ரியா, தோடி, நடபைரவி முதலிய பல ராகங்களை ஜி.என்.பி. பாடிய முறையும் பிருகாக்களை உபயோகிப்பதும் டி.என்.ஆரைப் பின்பற்றித்தான் என்பது இசை ரசிக்களின் கணிப்பு.

1930 முதல் 50 வரை அவர் சம்பாதித்த தொகை மட்டும் அக்கால கணக்குப்படி 5 கோடி இருக்கலாம். 1920 களிலேயே கச்சேரிக்கு 100 ரூபாய் கேட்ட ஒரே நாகசுரக்காரர் டி.என்.ஆர்தான். 40 - 50 களில் கச்சேரிக்கு ஒன்றுக்கு 10 ஆயிரம் ரூபாய்கூட வாங்கி இருக்கிறார். இவ்வளவு சம்பாதித்தும் சேர்த்து வைத்துக் கொள்ளத் தெரியாமல் செலவழித்துவிட்டு, கடைசியில் இறப்பு சடங்கிற்கு என்.எஸ்.கேதான் செலவழிக்க வேண்டி இருந்திருக்கிறது. ஓர் உண்மையான கலைஞனுக்குத்தான் கர்வம், பிறருக்கு உதவி செய்யும் மனப்பான்மை இருக்கும். சங்க கால பாணர்கள் கூட பெற்ற செல்வத்தை இல்லாதவர்களுக்கு இறைத்துவிடடு போனதைப் படித்திருக்கிறோமே!

நாகசுரக்காரர்கள் சைவ சமயிகள். ஒவ்வோர் வீட்டில் பூசை அறை எல்லாம் இருக்கும். இப்படிப்பட்ட பரம்பரையில் வந்த டி.என்.ஆர். மடத்து வித்வானாக இருந்த பொழுதும் கூட, சமய சடங்கிற்காக பெரிதாக ஒன்றும் அலட்டிக் கொண்டவராகத் தெரியவில்லை.

டி.என்.ஆரின் இசைச் சிறப்பையும், அவருடைய திறமைகளைக் கண்டு வியந்த எல்லீஸ் ஆர். டங்கன் மோஷன் பிக்சர்ஸ் நிறுவனத்திடம் சொல்லி இவர் இசையை அமெரிக்காவில் பதிவு செய்ய விரும்பி அழைத்தபோது கூட போகாமல் இருந்துவிட்டார். அப்படிப்பட்ட இசைக் கலைஞரிடம் இருந்த குறையை பெரிதுபடுத்திக் காட்டுவது தமிழக பத்திரிகைகளுக்கு ஒரு

விருந்து சாப்பிட்டதுபோல. ஆனால் டைகர் வரதாச்சாரி பிராந்திக்கு சைடீசாக சுட்ட அப்பளம் சாப்பிடத்தைப் பற்றி எழுத மாட்டார்கள். இது தமிழகத்தை பிடித்த பீடை!

டி.என்.ஆரின் இசைத் தட்டுகள் அனைத்தையும் ஒளிநாடா, சிடிகளாக்க ஆவண செய்ய வேண்டும். அதுபோலவே அவர் நடித்த படங்களின் நெகட்டிவ்கள் பாதுகாக்கப்பட வேண்டும். இனிவரும் சந்ததிகளுக்கு அவை சிறந்த இசை ஆவணங்களாக இருக்கும்.

## புகழாரங்கள்

**திராவிடர் இசைமாநாட்டில் முன்னாள் முதல்வர் திரு. அண்ணாதுரை அவர்கள் ஆற்றிய பேருரையில்,** ''சங்கீதம் எந்தப் பாஷையாயி ருந்தாலென்ன? என்று கூறுபவர்கள் ராக இலட்சணமே முக்கியம். சாஹித்ய இலட்சணம் முக்கியமாகாது என்று கூறுபவர்கள், திருவாவடுதுறை இராஜரத்தினம் அவர்களின் நாகஸ்வரமும், கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளையின் பிடிலும் இருக்க, வாய்ப்பாடு வேறு ஏன் தேடுகிறார்கள்? அந்த நாதஸ்வரத்தில் ராக இலட்சணங்கள், போதும் என்கிற அளவுக்குக்



இடதுபக்கம் முதலில் தவில் வாசிப்பவர் நீடாமங்கலம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, குளிக்கரை பிச்சையப்பா, டி.என்.ஆர்., திருவிடைமருதூர் வீருசாமிப் பிள்ளை


சி.என். அண்ணாதுரை

கேட்கலாம்! ஜிலுஜிலுப்பு வேண்டுமா? கமகம் தேவையா? ஆலாபனத்தில் அலங்காரம் வேண்டுமா? எது நாதஸ்வரக்காரரால் முடியாது? தாள வரிசைகளிலே திறமைகள் கேட்க வேண்டுமா? பக்கத்திலே நிற்கும் தவுல்காரரைப் பார்த்தால் போதுமே! கோடி இடி கேட்கும்! சங்கீதம், வெறும் ராக இலட்சணம், நாதம் என்று பேசுவோர் நாதத்தை நாதஸ்வரத்தில், பிடிலில், வீணையில், புல்லாங்குழலில் கேட்கின்றனர் என்றாலும், வாய்ப்பாட்டும் தேடுகின்றனர்! காரணம் என்ன? வாய்ப்பாட்டிலே நாதமும், நெஞ்சை அள்ளும் சாஹித்யமும் இருக்குகிறது என்பதற்காகத் தான்.''

மற்றொரு சமயம், சென்னையில் திரு.எஸ்.எஸ்.பி. லிங்கம் அவர்களது பெண் குழந்தைகள் அழகு ராணி, மணிமேகலை ஆகியோருக்கு எழுத்தறிவிப்பு விழா நடைபெற்றபோது டி.என்.ஆர். கச்சேரியைக் கேட்டு ரசித்த அண்ணா, தமது பாராட்டுரையில்,

''நமது நண்பர் ராஜரத்தினம் அவர்கள் நாயனத்தைத் தொலைவில் இருந்து கேட்க நேரிட்டால், அங்கு ஏதோ வீணையில் வாசிக்கப்படுகிறது என்றும், சில வேளைகளில் குழல் ஒலி எழும்புவதாகவும், இன்னும் சில நேரங்களில் முழவொலி கிளம்புகிறதென்றும் சந்தேகப்படுவர்..'' என்று தமக்கேயுரிய நடையில் தெளிவுபடுத்தினார்.

**அமரர் கல்கி பாராட்டுரை**


அமரர் கல்கி

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நெடுங் காலம் நடந்து வந்த போர்களைக் குறித்துக் கேள்விப்பட்டிருப்பீர்கள்.

அதே மாதிரியாக ஸ்வரங்களுக்கும் அபஸ்வரங்களுக்கும் நீடித்த பெரிய யுத்தம் ஒரு காலத்தில் நடந்தது. இந்த யுத்தத்தில் அபஸ்வரங்களின் கட்சி ஜயித்து விடுமோ என்று ஒருசமயம் பீதியுண்டாயிற்று. ஏனெனில் ஸ்வரங்களின் சைன்யம் கணக்குக்கும்

வரையறைக்கும் உட்பட்டது. இத்தனை வீரர்கள்தான் என்று எண்ணிவிடலாம். அந்த வீரர்கள் இன்னின்ன ஸ்தானத்தில் நிற்க வேண்டும் என்ற வரையறையும் இருந்தது. ஆனால் அபஸ்வரங்களின் சைன்யமோ இராவணனுடைய மூலபலத்தைப் போல அளவிட முடியாத எண்ணிக்கை கொண்டதாயிருந்தது. புற்றிலிருந்து கிளம்பும் ஈசலைப் போல அபஸ்வர சேனா வீரர்கள் முடிவில்லாமல் வந்து கொண்டிருந்தார்கள். வரை துறை, ஒழுங்கு, கட்டுப்பாடு எதுவும் இல்லாமல் நினைத்த நினைத்த வேளைகளி லெல்லாம் கிளம்பிக் கண்டகண்ட இடங்களிலெல்லாம் புகுந்து தாக்கினார்கள். ஸ்வரங்களின் பாடு மிக ஆபத்தாய்ப் போய்விட்டது. இந்தப் பூவுலகத்திலிருந்து அடியோடு அழிந்து போக வேண்டியதாக நேருமோ என்று ஸ்வரங்கள் பீதியுற்றுத் தங்கள் தாயாகிய சங்கீத தேவதையிடம் சென்று முறையிட்டன. சங்கீத தேவதையும் அபஸ்வரங்கள் படுத்திய பாட்டினால் மிகவும் நொந்து போயிருந்தாள். ''வாருங்கள், குழந்தைகளே! நாதப் பிரம்மமாகிய நம் இறைவனிடம் போய் முறையிடுவோம்!'' என்று ஆறுதல் சொல்லி அழைத்துப் போனாள். நாதஸ்வரத்தின் சந்நிதிக்குச் சென்று சங்கீத தேவதையும் அவளுடைய குழந்தையாகிய ஸுஸ்வரங் களும் முகாரி ராகத்தில் தங்களுடய சோகக் கதையைச் சொல்லிப் புலம்பினார்கள். அதனால் மனமிரங்கிய நாதப் பிரம்மம் தமது சந்நிதானத்தில் நின்ற வீரர்களில் சிலரைப் பார்த்து, ''நீங்கள் பூவுலகில் போய்ப் பிறந்து அபஸ்வரங்களை அதம் செய்து ஸுஸ்வரங்களின் ஆட்சியை நிலைநாட்டி வாருங்கள்!'' என்று அருள் புரிந்தார்.



அவ்வாறு நாதப் பிரம்மத்தின் கட்டளைக்கு உட்பட்டுப் பூலோகத்தில் பிறந்த கானவீரரின் பெயர் திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளை.

இந்த நாளில் தமிழ் நாட்டில் பிறந்தவர்கள் பல விதங்களில் கொடுத்து வைத்தவர்கள். சிறப்பாக, சங்கீத உணர்ச்சி வாய்த்தவர்களுக்குத் திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளையின் நாதஸ்வர கானத்தைக் கேட்பது வாழ்வில் ஒரு மிகச் சிறந்த அநுபவமாயிருக்கும். அவருடைய வாசிப்பைக் கேட்டு ஆனந்திக்கக் கொடுத்து வைத்தவர்கள் அதிர்ஷ்டசாலிகள்தான். நம்மைக் காட்டிலும் கர்நாடக சங்கீத கலை அதிக அதிர்ஷ்டசாலி.

கர்நாடக சங்கீதத்திலும் தோடி ராகத்தின் அதிர்ஷ்டத்தை இவ்வளவென்று சொல்லி முடியாது.

இதற்கு முன்னால் தென்னாட்டில் எவ்வளவோ வித்வான்கள் தோடி ராகத்தைச் சிறப்புறக் கையாண்டு புகழ் பெற்றிருக்கிறார்கள். ஆனால் ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளையோ, தோடி ராகத்தைச் சக்கரவர்த்தியின் சிம்மாதனத்திலேயே ஏற்றி வைத்து விட்டார். மற்றப் பெரிய வித்வான்களெல்லாம் தோடி ராகத்தைக் கையாண்டதால் தாங்கள் புகழ் பெற்றார்கள். ஆனால் ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளை தோடியைக் கையாண்டதனால் தோடி ராகம் புகழ் பெற்றது.

ஆஹா! ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளையின் தோடி ஆலாபனையை முதன் முதலில் கேட்டபோது, அவருடைய கற்பனையை விட்டுத் தள்ளுங்கள், நம்முடைய மனதில் என்னென்ன இன்பமயமான கற்பனைகள் எல்லாம் உதித்தன!

குழந்தை தாயிடம் கெஞ்சும் குரலைக் கேட்டோம்; அன்னை குழந்தையிடம் கொஞ்சும் குரலைக் கேட்டோம்; ரதியும் மன்மதனும் பேசிக்கொண்ட காதல் மொழிகளைக் கேட்டோம்; முருகன் சிவபெருமான் செவிகுளிர மொழிந்த உபதேசத்தைக் கேட்டோம்: கலைமகள் கவிஞனுக்கு அருளிய ஆசி மொழிகளைக் கேட்டோம். நாரத முனிவருடைய தம்புரா சுருதியைக் கேட்டோம்; இராவணன் தன் எலும்பை ஒடித்து வீணையாகச் செய்து வாசித்த கானத்தைக் கேட்டோம்; கானப் பறவைகளின் கலகல த்வனியைக் கேட்டோம்; கோலக் குயில்களின் குரல் இனிமையைக் கேட்டோம்...

இவ்விதம் ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளை தோடி வாசித்துக் கொண்டிருந்த வேளையில் நம்முடைய உள்ளமும் கற்பனை உலகில் சஞ்சரித்துக் களித்துக் கொண்டிருந்தது. அவர் வாசிப்பை நிறுத்தியதும் நாமும் இந்த பூவுலகத்துக்கு வந்து இத்தனை நேரமும் நாம் அனுபவித்த இன்பங்கள் எல்லாம் கனவோ, நினைவோ என்ற வியப்பில் முழுகினோம்.

கர்நாடக சங்கீதத்தில் தோடி ஓர் அபூர்வமான ராகம். அந்த ராகத்தின் வரம்புகளுக்கு உட்பட்டு, பூரண ஸ்வரங்களுடன் ஜீவகளை தோன்றப் பாடுவதும் வாத்தியத்தில் வாசிப்பதும் அபூர்வமான சாதனை. ஆகையினாலேயே தோடி ராகத்தை விசேஷமாகக் குறிப்பிட்டுச் சொன்னோம். அந்த ராகத்தை அவ்வளவு அற்புதமாக ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளை கையாளுகிறார்

என்றால், அவர் மற்ற ராகங்களை எப்படி விந்தைகள் தோன்ற வாசிக்கிறார் என்பதைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. கல்யாணி, காம்போதி போன்ற பழமையான ராகங்களை வாசித்தாலும் சரி, அல்லது ஜகதலப் பிரதாப் பிரியா, ஜவாஹர்லால் மனோகரி போன்ற புதிய ராகங்களை வாசித்தாலும் சரி ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளையின் தனி மெருகு வாய்ந்த கற்பனைத் திறனையும் இனிய மழலை ஓசையையும் அவருடைய வாசிப்பில் காண்போம்; கண்டு உள்ளத்தைப் பறிகொடுத்து உலகத்தையே மறப்போம்.

ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளை அவர்களின் நண்பர்கள் அவருக்கு 'அகில உலக நாகஸ்வர ஏக சக்ராதிபதி' என்ற பட்டத்தைச் சூட்டியிருக்கிறார்கள். இதை ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளையும் ஏற்றுக்கொண்டு கடிதத் தலைப்புகளில் அச்சடித்திருக்கிறார். இவ்வளவு படாடோபமான பட்டத்தைக் குறித்து 'நாஸூக்' மனிதர்கள் புன்னகை புரிவார்கள். நாமும் அந்தப் பட்டங்களை அவ்வளவாக ரஸிக்கவில்லைதான். ஏனெனில், இந்தக் காலத்தில் 'ராஜா' 'மன்னர்' 'சக்ரவர்த்தி' முதலிய பட்டங்கள் அவ்வளவு மதிப்புப் பெற்றிருக்கவில்லை. ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளையினால் அல்லவா அநாவசியமாக மதிப்பு உண்டாகி வருகிறது?

மற்றபடி, 'ராஜா' 'சக்ரவர்த்தி' என்னும் பட்டங்களுக்கு மதிப்புள்ள காலமாயிருந்தால் ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளை 'அகில உலக நாதஸ்வர சக்கரவர்த்தி' என்ற பட்டத்துக்குப் பொருத்தமானவர் என்பதில் ஐயமில்லை. கர்நாடக சங்கீத உலகத்தில் நாதஸ்வர வாத்தியம் ராஜ சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கிறது. அந்த ராஜ வாத்தியத்தை இணையில்லாக் கற்பனைத் திறனுடன் கையாண்டு அந்த வாத்தியத்துக்கு முன் எப்போதுமில்லாத பெருமையை ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளை அளித்திருக்கிறார். அப்படியிருக்கும்போது 'நாதஸ்வர சக்கரவர்த்தி' என்று அவரை ஏன் சொல்லக்கூடாது?

சமூக வாழ்வையொட்டிய லௌகிக விவகாரங்களில் ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளையைப் பற்றிச் சில குறைகள் சொல்லப்படுவதுண்டு. ''கச்சேரிக்கு ஒப்புக் கொண்டு வராமலிருந்து விடுவார்'' என்பார்கள். ''வந்தாலும் சரியான சமயத்துக்கு வந்து சேரமாட்டார்'' என்பார்கள். ''சரியான சமயத்துக்கு வந்தாலும் மனது வைத்து வாசிக்க மாட்டார்; ஏமாற்றிப் போடுவார்!'' என்பார்கள்.

இந்த மாதிரி குறைகள் சொல்வதற்கு இடமில்லாதபடி ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளை நடந்து கொண்டால் நல்லதுதான். ஆனால் இப்படியெல்லாம் நடந்து கொள்ளும் ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளையிடம் அவருடைய கலை மேதையும் கற்பனைத் திறனும் இல்லாமலிருந்தால் நாம் திருப்தியடைய முடியுமா? ஒருநாளும் இல்லை. ''பூலோகத்துக்கு வரும்போது அவரிடம் இம்மாதிரி குறைகள் இருந்தால் இருந்துவிட்டுப் போகட்டும். ஆனால் சங்கீத உலகில் சஞ்சரிக்கும்போது அவர் கற்பனையின் உச்சியில் - கலையின் சிகரத்தில் இப்போதுள்ளதுபோல் எப்போதும் இருக்க வேண்டும்'' என்றுதான் ரஸிகர்கள் ஒருமுகமாய்க் கூறுவார்கள். அவ்விதமே நாமும் சங்கீத தேவதையிடம் விண்ணப்பம் செய்து கொள்கிறோம்.

**(கல்கி, மே 21, 1950)**

## நீலம்

முன்னாள் செய்தியாசிரியர்

சுதேசமித்திரன் - பாராட்டுரையில்

''ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளை வாசித்த தோடியை நினைத்தோடி வந்த கூட்டத்துக்குக் கணக்கே இருந்ததில்லை. அவரைப்போல அந்த ராகத்துக்கு உருவமும், உயிரும் கொடுத்து தனி முத்திரைகள் வைத்துப் போஷித்தவர்கள் அநேகமாக இல்லை என்றே துணிந்து கூறலாம். கல்யாணி, காம்போதி, ஷண்முகப்ரியா, கரகரப்ரியா, பவப்ரியா, வாசஸ்பதி, வராளி போன்ற ராகங்களை அவர் கையாண்ட வழியே அலாதி. என்றென்றும் நினைவிலிருந்து அகலாதவை.

ஆலாபனைக் கட்டத்தில், சாதாரணம், சுலபம் என மற்றை யோரால் விடப்பட்டு அல்லது விலக்கப்பட்டுப் போகும் பகுதிகளையெல்லாம் தேடிப் பிடித்துப் பிரயோகித்து பிரமாதம், அற்புதம் என்று கொண்டாடும் அளவுக்கு மெருகு தீட்டி வாசிக்கும் யோக்யதை அவரிடம் குடிகொண்டிருந்தது. துல்லியமான நாதத்தில் தூய்மையான சாஸ்திரிய சங்கீதத்தின் சாயை ஒவ்வொரு இடத்திலும் ஈடற்ற கற்பனைகளோடு தெளிவுபடச் செய்த தலைச்சிறந்த வித்வான் அவர்!

பொறுக்கிக் கொள்ளும் ராகம் எதுவாயினும் முதலெடுப்பில் அதன் 'ஆஸை' குறிப்பாகக் காட்டுவார். பிறகு வரம்பு எல்லைகள் வரை எட்டி, விசிறிவிட்டு வாசிப்பார். அடுத்தபடி ஸ்தாயிவாரி யாகப் பற்பல பகுதிகளில் தெவிட்டாத பிரமிக்கத்தக்க துரித

பிருகாக்களையும் பொழிவார். ஜீவன் பொருந்திய இடங்களை கமக நிறைவுடன் பிடிப்பாக்கிக் கொண்டு மேலிருந்து கீழும் கீழே இருந்து மேலுமாக ஊஞ்சல் மாதிரி காற்றைச் சிறிதாகவும் பெரிதாகவும் வெளியிட்டு ராகத்தின் உருவத்தைக் கணப்பொழுதில் வடித்துக் காட்டுவார். இதைத்தான் 'ஜாரு' என்று சங்கீத பாஷையில் வர்ணிக்கிறார்கள்.

**தமிழ் தியாகைய்யர் என்று புகழப்பட்ட பாபநாசம் சிவன் டி.என்.ஆரைப் பற்றி கூறுகையில்,** ''கூறை நாட்டு நடேசன் வாசிப்பைப் பூரண பிரவாகமாய் வரும் அகண்ட காவேரி வெள்ளத்துக்கு உவமையாகச் சொல்லலாம். மன்னார்குடி சின்னப் பக்கிரி எந்த ராகத்தை வாசித்தாலும் அவர் கையாளும் வக்ர சஞ்சாரங்களும், துரிதகால சஞ்சாரமும் தனிச் சிறப்புடையனவை யாய் இருக்கும். செம்பொன்னார்கோயில் ராமசாமி சிறுசிறு பல்லவிகளை ஒரு களையில் வாசித்து ராகமாலிகையாய் பல்லவியை முடிப்பதில் என்ன அற்புதக் கற்பனையும், பிருக்காவும் இருக்கும் என்பதை அனுபவித்து எனக்கு எழுதத் தெரியவில்லை. சிதம்பரம் வைத்தியநாதனது வாசிப்புக் கடல் மடை திறந்தாற் போன்ற வாசிப்பு... இதுவரை அடுக்கி வந்த நாதசுர வித்வான்களிடம் எந்த அம்சங்கள் எல்லாம் சிறந்தவையோ அவையெல்லாம் ஒன்று நிறைந்து திராட்சபாகம் என்று சொல்லும்படி அற்புத ரசம் செறிந்தது திருவாவடுதுறை டி.என். இராஜரத்தினத்தின் தேவகானம்....'' என்று விதந்துரைக்கப் பட்டார் டி.என்.ஆர்.

**மூதறிஞர் பாராட்டு:**

**சென்னை அடையாற்றில் உள்ள இசைக் கல்லூரியில் நடந்த இராஜ ரத்தினம் பிள்ளையின் நாகசுர இசைக்கு சி. இராஜகோபாலாச் சாரியார் வருகை தந்திருந்தார். கல்லூரித் தலைவர் முசிறி சுப்பிரமணிய அய்யர் கேட்டுக் கொள்ளவே திரு. இராஜாஜி தனது உரையில் பின்வருமாறு பேசினார்:** ''நாகசுரம்'' வாசித்து அந்த இன்பத் தைப் பருகும்போதும், 'கர்நாடகப் பாடல்'களை இந்தக் கருவியின் வாயிலாக எவ்வளவு அழகுற இசைக்க



திரு. ராஜாஜி

முடிகிறது என்பதை எண்ணும்போதும் இந்த 'நாகசுரக் கலை எவ்வளவு உயர்வானது என்பது புலன் ஆகிறது. மிக உயர்வான இக்கலை நம்நாட்டில் ஒரே ஒரு சாராரால் மட்டுமே கையாளப்படுவதை உணரும்போது மிகுந்த வருத்தம் ஏற்படுகிறது. விரைவில் இந்த 'வாத்தியத்தை எல்லா வகுப்பினருமே நன்கு கற்றுத் தேறவேண்டும்; இந்த இராஜரத்தினம் பிள்ளையைப் போல் பல இராஜரத்தினங்கள் தோன்ற வேண்டும் என்பதே என் அவா'' என்று முடித்தார் இராஜாஜி.

**இசை அறிஞரும், நாகசுர வரலாற்று ஆசிரியருமான திரு. பி.எம். சுந்தரம் அவர்களின் கணிப்பு இதோ:**

''ராஜரத்தினம் பிள்ளையின் வாசிப்பினை வருணிக்க வார்த்தைகளே யில்லை. எத்தனைக் கூறினாலும், அவை குறைவானவையாகத்தான் இருக்கும். அதிகமாக ஸ்வரம் அல்லது பல்லவி வாசிப்பதில் இவருக்கு விருப்பம் குறைவு; அதிலும் 'வியவஹார'மாக ஸ்வரங்கள் போடுதலை, இவர் கட்டோடு வெறுத்தார். ஒருசில கீர்த்தனைகள் மட்டுமே வாசிப்பார்; ஆனால் அமானுஷ்யமான கற்பனை செறிந்ததாகவும் அதற்கு ஈடு கூறமுடியாத விதத்திலும், அவருடைய ராக ஆலாபனைகள் அமைந்திருக்கும். இன்றுவரை அதற்கொப்பான ராக ஆலா பனையை எவரிடமும் கேட்க முடியவில்லை.



திரு. பி.எம். சுந்தரம்

அவருடைய நாகஸ்வர வாசிப்பு உயர்வானதா அல்லது வாய்ப்பாட்டாவென்று முடிவு செய்வது எளிதல்ல. இரண்டே நிமிடங்களில், சுமார் இரண்டு மணி நேரம் ஆலாபனை செய்தாலும் நிறைவு பெறாத கரஹரப்ரியா போன்ற ராகங்களைப் பாடும் அவரது ஒப்பற்ற வன்மைக்கு எடுத்துக்காட்டாக 'கவிகாளமேகம்' திரைப்படப் பாடல் இசைத்தட்டுக்கள் விளங்குகின்றன.

ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன்று இல்.

என்பது வள்ளுவர் வாக்கு. திருவாவடுதுறை இராஜரத்தினம் பிள்ளையின் மறைவினால் காலியாகிவிட்ட அந்த ஆசனம், இன்னும் காலியாகவே இருக்கிறது.''

# அழிந்து போன நந்தவனம்

**- எழுத்தாளர் கி. இராஜநாராயணன்**


கி. இராஜநாராயணன்

இனி பள்ளிக்கூடம் இல்லை எனக்கு என்று தீர்ந்தது. மேல்கொண்டு என்ன செய்ய என்ற கவலை இல்லை. வடக்குக் குளத்தில் தண்ணீர் வற்றிப் போய் விட்டால் நந்தவனத்துக் கிணறு இருக் கிறது குதித்து நீச்சல் அடித்து விளை யாட...

ஊருக்கு வடகிழக்கு மூலையில் பள்ளிக்கூடத்துக்குப் பக்கத்தில் எங்கள் அப்பா அமைத்த நந்தவனம் அது. அதைப் பராமரிக்க ஒரு குடும்பத்தாரை ஏற்பாடு செய்திருந்தது. அந்தக் குடும்பத்தைத் தனது இளம்தோளில் தாங்கும் உத்திரம் ஆக வேண்டியதாகி விட்டது எனது பாலியக்கால நண்பன் சக்திவேலுவுக்கு. ஆறாவது வகுப்பு வரை என்னோடு வகுப்புத் தோழனாக இருந்தவன். அவனுடைய கூரைமண் வீட்டைக் கடந்துதான் குறுக்குப் பாதையாக நான் பள்ளிக்கூடத்துக்குப் போகவேண்டும். காளியம்மன் கோயில், பார்வதியம்மன் கோயில் ரெண்டையும் கடக்கும்போது ஏதாவது ஒரு கோயிலினுள் அவன் இருப்பான். அவனுடைய தாத்தா முத்தையாப் புலவர்தான் அந்தக் கோயில்களின் பூசாரி. அந்த முத்தையாப் புலவரின் மூன்றாவது மகளைத்தான் காருகுறிச்சி அருணாசலத்துக்குக் கட்டிக் கொடுத்திருந்தது; முதல் தாரமாக. காருகுறிச்சியும் இப்படித்தான் எனது பாலியகால சகாவாக ஆனது.

நான் பள்ளிக் கூடத்துக்கு ஒருநாள் வந்து கொண்டிருந்தபோது சக்திவேல் வீட்டினுள் பெண்களின் அழுகைக் குரல் பலமாக கேட்டது. முத்தையாப் புலவர் திடீரென்று இறந்து போய்விட்டதாக வீட்டின் முன் கூடியிருந்த கூட்டத்திலிருந்த ஒருவர் மூலம் தெரிந்து கொண்டேன்.

அதுக்குப் பிறகு அந்தக் கோயில்களின் பூசாரியாக சக்திவேல்தான் இருந்தான்.

எனது வாசகர்களுக்கு இந்த சக்திவேல் என்பவன் யார் என்பது ஓரளவு புரிந்திருக்கும்! ''பிஞ்சுகள்'' குறுநாவலில் வருகிற செந்தில்வேல்தான் இந்த சக்திவேல்.

சக்திவேலின் அப்பாவும் சித்தப்பாவும் நாகஸ்வர வித்வான்கள். அடுத்த சித்தப்பா தவில் வித்வான். இந்தக் குடும்பத்தில் பொண் எடுத்த காருக்குறிச்சியைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை.

இப்படி ஒரு இசை வாழ்ந்த குடும்பச் சூழலில் பிறந்து வளர்ந்த சக்திவேலுவுக்கு இசை அந்நியாகி விட்டது. ரெண்டு கோயில்களுக்கும் பூசை செய்வது, நந்தவனத்துப் பூச்செடிகளுக்கும் பச்சிலைக் கொடி செடிகளுக்கும் திலாப் பிடித்து தண்ணீர் பாய்ச்சுவது, இதுபோக களை செதுக்க உரம்வைக்க என்று அங்கே ஏதாவது செய்து கொண்டிருப்பான். முக்கியமாக நந்தவனத்துக்குள்ளே பெண்களும் பெண்பிள்ளைகளும் நுழைந்துவிடாமல் பார்த்துக் கொள்ளணும். இதுக்கு இரண்டு காரணங்கள் சொல்லப்படும். பூக்கள் பேரில் அவர்களுக்கு உள்ள தாங்க முடியாத பிரியம். மற்றது ''தீண்டல்'' வந்த பெண்வாடை பூச்செடிகளுக்கு ஒவ்வாமை என்பது.

நந்தவனத்துப் பூச்செடிகளே கதி என்று கிடந்த சக்திவேலைப் பார்க்க நாங்கள்தான் அங்கே போகணும். ''எப்பா, பூந்தோட்டக் காவல்காரா'' என்று சொல்லிக் கொண்டே அங்கே வருவார் சீனி நாயக்கர். எங்கள் ''சங்கத்தில்'' இவரும் ஒரு சந்தா இல்லாத அங்கத்தினர். அவர் வீட்டுக்குச் சாப்பிட மட்டும் போவார். மற்ற முக்கால்வாசி நேரம் எங்களோடதான். அவருடைய வாய் எங்களோட பேசும். பீடி குடிக்கும். மற்ற நேரங்களிலெல்லாம் ராகங்கள் இசைத்துக்கொண்டே இருக்கும்.

என்னையும் சேர்த்து சதா ஒரு ''வெட்டிக் கூட்டம்'' எப்போது பார்த்தாலும் இருந்துகொண்டே இருக்கும். என்னுடைய தகப்பனார் காலமானதும் அவர்



திரு. கு. அழகிரி சாமி

இன்ஷ்யூர் செய்த கம்பெனியிலிருந்து ஒரு தொகை வந்தது. அதை வாங்கி எனது பாட்டி ஒரு புதுவீடு கட்டினாள். அந்த வீட்டில்தான் எங்கள் ஜாகை. ஊர்சுற்றுகிற நேரம் போக மற்ற நேரங்களிலெல்லாம் எங்களை அங்கேதான் பார்க்கலாம். அந்த வீட்டிற்கு விளாத்திகுளம் சாமிகள் வைத்த செல்லப் பெயர் "சங்கீத மகால்". சாமிகள் வந்தால் அங்கே என்னோடு ஒருவாரம் பத்து நாள் என்று தங்குவார். பாட்டு, சாப்பாடு, தூக்கம் என்று பொழுது கழியும். காருகுறிச்சி அருணாசலம் வந்தாலும் அதேவீட்டில் என்னோடு தங்கியிருப்பார். நாயனத்தில் எப்படி வாசிப்பாரோ, அதேபோல் அவர் பிரமாதமாகப் பாடுவார். அவருடைய குருநாதர் ராஜரத்தினம் அவர்களும் அதேபோல்தான். ராஜரத்தினத்தின் கண்டத்திலிருந்து வெளிப்படும் அந்த இசைக்குரலைக் கேட்கும்போதெல்லாம் கு. அழகிரிசாமி சொல்லுவான், ஒரு சங்கிலிருந்து வெளிவரும் நாதம்போல் ஒலிக்கிறது அவருடைய வாய்ப்பாட்டுக் குரல் என்று.



திரு. விளாத்திக்குளம் சுவாமிகள்

இந்தக் குரலில் மயங்கிய ஒருத்தர் ராஜரத்தினத்தைக் கதாநாயகனாக வைத்து ஒரு சினிமாப் படம் "கவி காளமேகம்" (?) என்று எடுத்தார். அதில் ராஜரத்தினம் பாடிய பாடல்கள் இசைத்தட்டாக வெளிவந்தன.

சக்திவேலின் அப்பா, சித்தப்பா இவர்கள் தங்கள் பூர்வீக ஊரான குருமலை கிராமத்தில்தான் இருந்து வந்தார்கள். இடை செவலில் நடக்கும் திருவிழா, கல்யாண விசேஷங்களுக்கு வாசிக்க வரும்போது மட்டும் இங்கே தங்கிச் செல்வார்கள்.

பின் நாட்களில் நான் சக்திவேலின் சித்தப்பாவான குருமலை பொன்னுசாமி பிள்ளை அவர்களைக் குடும்பத்துடன் இங்கே வரவழைத்து ஒரு வாடகை வீட்டில் தங்க வைத்து, சில காலம் அவரிடம் முறையாக இசை பயின்றேன். என்னோடு கு.அ. வையும் (எழுத்தாளர் கு. அழகிரிசாமி) சேர்த்துக் கொண்டேன். சீனிநாயக்கரும் சேர்ந்து கொள்வார்.

காலம் ஒரும்பாக ஆக மக்களை ஏழ்மை பிடித்து வாட்டியது. தொடர்ந்து வானம் பொய்த்தது. பட்டினியால் மக்கள் செத்தார்கள்.

மனிதருக்கே தண்ணீர் இல்லை. பூச்செடிகளுக்கு எங்கே போக. பக்தர்களோடு சேர்ந்து கோயில் சாமிகளும் 'பட்டினி' கிடந்தன.

இதற்கு முன்னதாக, கோயில் வருமானமும் நந்தவனத்தில் பூக்கள் மூலம் கிடைத்த வருமானமும் சேர்ந்தாலும் சக்திவேல் குடும்பத்துக்குக் காணாததால் அவன் சித்தாள் வேலைக்குப் போய்வந்தான். அவன் படும் பாதரவு மனசை வாட்டியது.

என்னைப்போல் அவனுக்கும் ஒரு சில கனவுகள் இருந்தது. அவனுடைய ஆசையெல்லாம் திருவாடுதுறை ராஜரத்தினம் பிள்ளை போல நாயனம் வாசித்துப் பேர் எடுக்க வேண்டும் என்பதே. நேரம் கிடைக்கும் போதெல்லாம் நாயனத்தில் சாதகம் செய்வான்.

அந்த நாயனத்தை நான்தான் அவனுக்கு வாங்கப் பணம் தந்தேன்.

ஒருநாள் அவன் ரொம்ப வருத்தத்தோடு இருந்தான். என்ன என்று கேட்டதற்கு நாயனத்தை அப்பா எடுத்துக்கொண்டு போய்விட்டார் என்றான். அப்பா நாயனத்தை அப்பா கொண்டு போனார்; உனக்கென்ன என்றேன்.

எவ்வளவு பிரியமா வச்சிருந்தேன்; அப்பா எனக்கொரு நாயனம் தரப்படாதா என்றான்.

அவர்கள் நிலையில் ஒரு நாயனம் வாங்க முடியாதுதான். நான் முதலில் ஒரு ஹார்மோனியம் வாங்கினேன். பிரெஞ்சு நாட்டில் செய்யப்பட்டது அது. பிறகு ஒரு வயலின் வாங்கினேன். அதன் பிறகு ஒரு நாயனம் வாங்க சக்திவேலுக்குப் பணம் தந்தேன். மதுரைக்குப் போய் வாங்கி வந்தான். அந்தச் சமயத்தில்தான் நாயனத்தின் வடிவமே மாறியிருந்தது. அதுக்கு முன்பெல்லாம் 'திமிறி' என்கிற முக்கால் முழ நீளமுள்ள வெங்கல அணசு பொருத்திய நாயனம்தான் உண்டு. நாயனத்தில் இந்த மாற்றத்தைக்



பிற்காலத்தில் காருகுறிச்சி அருணாசலம்

கொண்டு வந்தவரே திருவாடுதுறை டி.என். ராஜரத்தினம் பிள்ளைவாள்தான். அயிரை மீனைப் போல இருந்த திமிறி வாத்தியம் விலாங்கு மீனைப்போல நீண்ட 'பாரி' வாத்தியமாகியது. இதன் கம்பீரமான குரலைக் கேட்டவர் மயங்கினர்.

அந்தச் சமயத்தில் ராஜரத்தினத்திடம் காருகுறிச்சி அருணாசலம் திருவாடுதுறையில் ''குருகுலவாசம்'' பண்ணிக் கொண்டிருந்தார். குருவுக்கு காருகுறிச்சி செய்த பணிவிடைகளைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கிறேன். அது அப்படி இருக்க, இப்போது காருகுறிச்சியாரிடமிருந்து சக்திவேலுவுக்கு ஒரு அவசரச் செய்தி வந்தது. அதன்படி, 'ராஜரத்தினம் வீட்டுக்கு, ஒரு நல்ல வேலையாள் தேவை. சத்திவேல் வந்தால் நல்லது.'

சத்திவேல் உட்பட எங்கள் எல்லோருக்கும் சந்தோசம். உடனே புறப்பட்டுப் போ என்று சத்திவேலை அனுப்பி வைத்தோம். சில வருசங்கள் சத்திவேல் ராஜரத்தினம் வீட்டில் இருந்ததால், அவன் இங்கே இடைசெவலுக்கு வரும்போதெல்லாம் நான் அவனிடம் கேட்டு கேட்டுத் தெரிந்து கொண்ட செய்திகள் ஏராளம். அவைகளையும் அதோடு நானே அறிந்துகொண்ட பல செய்திகளையும் இங்கே சொல்லுகிறேன்.

திமிறி நாயனத்தின் ஒத்துச்சத்தமே - அதன் எச்சான ஒலி - மிக அருகில் நின்று கேட்க ராஜரத்தினம் சங்கடப்படுவதாக நான் உணர்ந்தது, கோவில்பட்டியில் அவர் வாசிக்க வந்த ஒரு திருவிழா ஊர்வலத்தின்போதுதான். ஒத்துவாசிப்பவனை, தள்ளிப் போய் நில் என்று சொல்லிக்கொண்டே இருந்தார். இது நடந்து பல நாட்களுக்குப் பிறகு ராஜரத்தினம் பல வகைப்பட்ட நாயனங்களை வைத்து வாசிப்பதாகக் கேள்விப்பட்டேன்.

இப்போது அமலில் நிற்கும் பாரியை அவர் வடிவமைக்கப் பட்டபாடு மிக அதிகம்.

''எப்பப் பார்த்தாலும் வீட்டில் ஒரு ஆசாரியாரைக் கொண்டு வந்து வைத்துக்கொண்டு, ஆறிய ஆச்சா மரங்களில் வெவ்வேறு வித விதமாக நாயனங்களைப் பல்வேறு அளவுகளில் கடைந்து செய்து பார்த்து, அதை வாசித்துப் பார்த்து, இப்படிச் செய்துகொண்டேயிருப்பார்.

நாயனத்தில் - சுரத்துக்கு ஒரு துளைதான் உண்டு. பிரதிமத்திய ராகங்களையும் சுத்த மத்திம ராகங்களையும் வாசிக்க இரு

மத்திமங்களுக்கும் தனித்தனியாகத் துளைகள் இருப்பது அவசியம் என்று ராஜரத்தினம் கருதினார். சுருதி சுத்தமாக வாசிக்க வேண்டுமென்றால் இது மிக அவசியம் என்றார். "ஆசாரி பாடு ரொம்ப லத்தாடிட்டது; துளைகள் போட்டுப் போட்டு, ஊதிப் பாத்துப் பாத்து, ரொம்ப நாயனங்கள் வீணாப் போச்சி.

"கடோசியில் ஒண்ணு அமைஞ்சது" ரொம்ப சுத்தமா அமைஞ்சிட்டது. ஆனா அதுலயும் ஒரு சங்கடம் வந்து சேந்தது. அதை சரிகட்ட ராஜரத்தினம் ஒண்ணு பண்ணார். மெழுகு - தேன் - மெழுகு கொண்டுவரச் செய்து, பிரதிமத்திம ராகத்தை வாசிக்கும்போது சுத்த மத்தம துளையைத் தேன் மெழுகால் அடைப்பதும், சுத்த மத்திம ராகங்களை வாசிக்கும்போது பிரதிமத்திமத் துளையையும் அடைத்துக் கொண்டார்.

சீவாளி தயாரிப்பதில் ராஜரத்தினம் ரொம்ப ரொம்பக் கவனம். சத்திவேல் சொன்ன அந்த ஊரின் பெயர் எனக்கு இப்போது - இந்தக் கணத்தில் - ஞாபகத்துக்கு வரமாட்டேன் என்கிறது. காவிரிக் கரையில் அந்த இடத்தில் வளர்ந்திருந்த ஒருவகை நாணல்தான் சீவாளி தயாரிக்க ரொம்ப விசேஷம். அவருடைய நாயனச் சத்தத்தின் இனிமைக்கே, அந்த ஊர் நாணலில் தயாரிக்கப்பட்ட சீவாளிதான் காரணம் என்பார்கள்.

குறிப்பிட்ட பருவத்தில்தான் அது கிடைக்கும். ரொம்ப கவனமாகப் பார்த்து அதை அறுவடை செய்ய வேண்டும். அந்தச் சமயத்தில் எத்தனையோ ஊர்களிலிருந்து சீவாளி நாணல் தட்டை விற்பனைக்கு வருமாம். எல்லாத்தையும் வாங்கிப் பார்ப்பாராம். அந்த ஊர் தட்டைப் போல வருமா என்று சொல்லி வாங்கிய மற்ற ஊர் நாணல் தட்டை நறுக்குகளை வீசி எறிந்து விடுவாராம். ரேகை சாஸ்திரிகள் ரேகை பார்க்க ஒரு பூதக் கண்ணாடி வைத்திருப்பார்களே அதுபோல் ராஜரத்தினத்திடம் ஒரு கண்ணாடி உண்டாம். தேர்ந்தெடுத்த நாணல் நறுக்குகளை அந்தக் கண்ணாடி வழியாகத் திருப்பித் திருப்பிப் பார்த்துத் தேர்ந்தெடுத்து, தட்டையின் ஈரம் காய்வதற்குள் ஒரு பக்கத்தை நூலால் இறுக்கிச் சுற்றி மறுபக்கத்தின் நீளத்தை அளவாக வெட்டிவிட வேண்டும். இப்போது பார்ப்பதற்குச் சிறிய தட்டையான புனல் வடிவத்தில் தெரியும் சீவாளி.

இதன் பிறகு சீவாளிக்கு துவர்ப்பு ஏற்றுதல் என்கிற முக்கியமான சடங்கு உண்டு. வாய்நிறைய வெற்றிலை எச்சிலைக் கூட்டிக்

கொள்ள வேணும். வெற்றிலை போடும்போது அந்தச் சமயத்தில் மட்டும் பாக்கின் துவர்ப்புக் கூடுதலாக இருக்க வேண்டும். அப்படிக் கூடுதலான துவர்ப்பு எச்சிலைச் சீவாளியின் உள்ளும் புறமும் தோயும்படியாக, குளுகுளு என்று வெற்றிலை எச்சில் அபிசேகம் பண்ணி, அப்படிப் பண்ணிய புதிய சீவாளிகளை உலர விடுவதற்காக வீட்டு முற்றத்தில் தோரணமாகக் கட்டி விடுவாராம். நன்றாக உலர்ந்த உடன் சுத்தமான தண்ணீரில் போட்டு அலசி நாயனத்தில் சொருகி ஊதிப் பழக்குவார்களாம் சீவாளிகளை.

சத்திவேல் சொல்லுவான்: அதிகாலையில் எழுந்து நாங்கள் ''பனி சாதகம்'' பண்ணுவோம். அப்போது எங்களுக்கு அந்த துவர்ப்புப் பாடம் பண்ணிய சீவாளியைத் தந்து வாசிக்கச் சொல்லுவார். அதை வைத்து வாசிக்க ரொம்பச் சிரமப்படும். வாசிக்க வாசிக்கத்தான் ஒலி வசப்படும். ''தம்'' கொடுத்துதான் வாசிக்க வேண்டியதிருந்த சீவாளியில் நேரம் ஆக ஆகச் சுகமான இனிமையான ஒலி வர ஆரம்பிக்கும். அப்போது நமக்கே வாசிக்க ஆனந்தமாக இருக்கும் நாயனம். சொல்லி வச்சதுபோல ராஜரத்தினம் அவர்கள் வந்து, ''எடு, கொண்டா அந்தச் சீவாளிய'' என்று வாங்கி வைத்துக்கொண்டு இன்னொரு துவர்ப்புச் சீவாளியைத் தந்து, இதைப் பழக்கு என்பார்.

இப்படியாகப் புதிய சீவாளிகளை நாங்கள் வசமாக்குவோம் என்பான். தனது வாத்தியத்தைப் பேணிப் பேணி அதன் பகுதிகளில், புதிய புதிய பரிசோதனைகள், மாறுதல்கள் செய்து பார்த்தவர் ராஜரத்தினம்.

ஆரம்ப காலத்தில் அவருடைய ''சேட்டை''களைப் பார்த்து, கேள்விப்பட்டு பரிகாசம் செய்து கொண்டிருந்தது நாகஸ்வர உலகம். அப்போதெல்லாம் நாயனக்காரர் ராகம் வாசித்துக் கொண்டிருக்கும்போதே தவில்காரரும் மத்தியில் மத்தியில் ''தட்டுவது'' என்கிற பழக்கம் இருந்தது. இதை அடியோடு நிறுத்தியவர் ராஜரத்தினம்தான். ராகம் வாசித்துக் கொண்டே வரும்போது இடை நிறுத்தம் வரும். அப்போதுதான் தவில் வாசிக்க வேண்டும் என்ற புதிய பழக்கத்தைக் கொண்டு வந்தார்.

அந்தக் காலத்துப் பெரியவர்கள் வாசித்த நாகஸ்வர இசைத் தட்டுக்களைக் கேட்டுப் பார்க்கிறவர்களுக்கு இது புரியும். ஆரம்ப காலத்து ராஜரத்தினத்தின் இசைத் தட்டுகளில் ஒன்றிரெண்டு இசைத் தட்டுகளிலும் கூட இந்தப் ''பிழை'' உண்டு.

இந்தப் ''பிழை'' பற்றி இரு வேறு கருத்துகள் உண்டு. இசைத் துறையில் பூர்வீகம் தொட்டு பெரியவர்கள் கடைப்பிடித்து வந்ததைப் பிழை என்று தள்ளலாமா?

பிரமாதமாக வாசிக்கிறபோது ஆஹ, பலே என்பது போலத் தட்டினால் பரவாயில்லை நீடாமங்கலம் மீனாட்சிசுந்தரம் போல. எல்லாத் தவில்காரர்களும் நீடாமங்கலம் ஆகிவிட முடியாதே. அதனால் சப்சாடாக நிறுத்து என்று நாகஸ்வரச் சக்கரவர்த்தியின் ஆணையாக நிலைத்துவிட்டது. இந்த ஆணை எழுத்து வடிவமாகவோ சொல் வடிவமாகவோ ஏற்படவில்லை வெறும் ஒரு கண் பார்வையிலேயே பிறப்பித்து விட்டார் ராஜரத்தினம்.

அறிந்தவர்களே அறிவார்கள் இதை; கண்களாலேயே அற்புதமாக விஷயங்களைப் பரிமாறிக் கொள்வார்கள் நாகஸ்வரக் குழுவிலுள்ள அத்தனை பேர்களும். நிகழ்கலைக் கலையாளர்கள் அத்தனை பேர்களுக்குமே இது கைவரப் பெற்றதுதான் என்றாலும் நாகஸ்வரக் குழுவிலுள்ளவர்களின் நயனமொழி, கண்டு அனுபவிக்கத்தக்கது.

'வந்துட்டான்பார்' என்கிறார் பக்க நாயனக்காரரிடம் கண் ஜாடையால். பத்திரிகைகளில் இசையாளர்களைப் பற்றி 'வாங்கு வாங்'கென்று வாங்குகிறவர் அப்பதான் வந்து உட்காருகிறார் என்பது இது. எங்கே கச்சேரி நடந்தாலும் தவறாமல் வந்துவிடும் ஒரு குண்டு ரசிகையை கண்ணாலேயே அடையாளம் காட்டுகிறார் பக்க நாயனக்காரர்.

ஒத்துக்காரரைத் திரும்பிப் பார்த்தால் அதுக்கு ஒரு அர்த்தம். தவில்காரரைப் பார்த்தால் ஒரு அர்த்தம். இப்படி வார்த்தைகள் கண் வழி கண்ணுக்குள் போவது ரசமாக இருக்கும்.

நாயனம் வாசித்துக் கொண்டிருக்கும்போதே பக்க நாயனக் காரரைப் பாத்து கண்ணடிப்பார் தில்லானா மோகனாம்பாளில் சிவாஜி; வில் வண்டியிலிருந்து நாயகி இறங்கி வருவதை. ஜாடைகளில் இவர்கள் சங்கீத மொழியிலேயே லவ்கீகம் பேசுவது ஒரு அழகு. மற்ற நாயனக்காரர்கள் அந்தக் காலத்தில் கச்சேரியில் வந்து உட்கார்ந்து கொண்ட பிறகுதான் சீவாளி சரியாக நனைந்து விட்டதா என்று பார்க்க, பீ, பீ என்று 'சீட்டி' அடிப்பார்கள். ராஜரத்தினம் இப்படிச் செய்ததை நான் பார்த்ததே இல்லை.

ஜாகையிலேயே சரி பார்த்து நாயனத்தைக் கழுவித் துடைத்து சீவாளிகளையெல்லாம் நனைத்து, மேல் ஸ்தாயியில் வாசிக்கப்

போகும் சீவாளிகளுக்கு முன்புறம் கீழ் ஸ்தாயியில் வாசிக்க சீவாளியின் அடிப்புறத்திலும் குச்சிகளை (இந்தக் 'குச்சி'கள் யானைத் தந்தத்தினால் ஆனவை) சொருகி வைத்துவிடுவார்.

கச்சேரியில் வந்து அமர்ந்ததும் ஒத்துவின் 'கும்'என்ற ஒலி பரவியதும் தவிலின் எடுப்பான முன்னுரை வாசிப்பு முடியவும்; அதற்குள் ராஜரத்தினம் பதமான சீவாளியை வாய் அழுத்தத்தினால் நனைத்து நாயனத்தில் சொருகி வாசிக்க ஆரம்பித்து விடுவார்.

நமக்கு ஏற்கனவே அறிமுகமான ராகங்களை வித்தியாசமான புதிய வடிவங்களில் வழங்கியவர்கள் நான் அறிய மூன்று பேர்.

1. விளாத்திகுளம் சாமிகள். 2. திருவாடுதுறை டி.என். ராஜரத்தினம், 3. மாலி என்ற டி.ஆர். மகாலிங்கம்.

ராஜரத்தினம் தோடி ராக ஆலாபனை இசைத் தட்டில் முதலில் வந்தபோது கர்நாடக இசை உலகமே அதைக் கேட்டுக் கேட்டு வியப்பும் ஆனந்தம் கொண்டது. அதுவரை தோடியை அப்படி யாரும் வழங்கியதில்லை.

அந்த இசைத் தட்டு பதிவின்போது நடந்த நடப்பை அங்கே அப்போது உடன் இருந்த மற்றவர் வியந்து சொன்னது இப்போது ஞாபகத்துக்கு வருகிறது. ஒத்திகை என்ற பேரில் முதலில் வாசித்த தோடி அனைவரையும் மெய்மறக்கச் செய்தது. அதுவே 'ஓகே' ஆகி ஒலிப்பதிவு தொடங்கியது. இப்போது வாசித்த தோடி மற்றொரு அழகு! இன்னொன்றும் ஏதொன்றுக்கும் இருக்கட்டும் என்று வாசித்துப் பதிவானது இன்னொரு அழகான தோடி. சில உடன்பிறப்புக் கன்னியரில் யார் அழகு என்று தீர்மானிக்க முடியாமல் திணறிப் போய்விடுவோம். அதுபோல் ஆகிவிட்டதாம்.

வெளிவந்த தோடிதான் நாம் அறிவோம். அந்த மற்றது இன்னும் இருக்குமா, அதையும் நாம் கேட்க முடியுமா தெரியவில்லை.

ஒரு ராகத்தில் அதன் பல்வேறு வடிவழகுகளைக் காட்ட முடிகிறவர்களால்தான் பல்வேறு வடிவ வர்ணமெட்டுக்களில் ஒரே ராகத்தில் பல கீர்த்தனைகளை உண்டாக்க முடியும்.

சத்திவேல் சொன்ன இன்னொரு தகவல்.

கல்யாணி ராகத்தில் என்று ஞாபகம் அந்தக் கீர்த்தனை. அதைக் கீர்த்தனை என்று சொல்லுவதை விட வர்ணமெட்டு என்று சொல்லுவதுதான் சரி.

வார்த்தைகள் இல்லாத சுரங்களால் மட்டுமே ஆன கீர்த்தனை வடிவம்.

இதை ராஜரத்தினம் சத்திவேலுவுக்குப் பாடியும் காட்டி நாயனத்தில் வாசித்தும் காண்பித்திருக்கிறார்.

இது போன்ற வர்ணமெட்டுக் கீர்த்தனைகளைப் புல்லாங்குழல், நாயனம், மாண்டலின் போன்ற இசைக் கச்சேரிகளில் ஜமாய்க்க முடியும், பாட முடியாது.

இந்தக் கீர்த்தனை மெட்டு ராஜரத்தினம் உண்டாக்கியதா அவரது முன்னோர்கள் வாத்திய இசைப்பில் வாசிப்பதற்கென்றே உண்டாகினார்களா, இதுபோல் மற்ற ராகங்களிலும் இருக்கிறதா - தெரியவில்லை. நினைத்தபோதெல்லாம் நினைத்தபடிக்கு எந்த இடத்திலும் ஒரு கேமராவில் படம் பிடிப்பது போல - ஒலிப்பதிவு வசதி அந்தக் காலத்தில் கிடையாது. அப்படி இருந்திருந்தால் ராஜரத்தினம் விளாத்திகுளத்தின் ராக வடிவங்களைப் பதிவு செய்திருக்கலாம்.

இப்படி எவ்வளவோ விசயங்கள் இல்லாமல் போய்விட்டதால் அவை இல்லாமல் ஆகிவிட்டது. அதனால் விளாத்திகுளம் இல்லை, திருவாடுதுறையும் இல்லை.

அந்த நந்தவனம் அழிந்து விட்டது இடைசெவலில்.

(நன்றி : தினமணிகதிர், இசைச் சிறப்பிதழ்)

## இசைக்கே ஓர் இரங்கற்பா

என்னிவன் வளர்த்த பேறு எப்படிப் பயின்றான்
இந்தச் சின்னதோர் குழலுக்குள்ளே செகத்தையே உருட்டும் பாடம்!
மன்னவன் இவனே! நாத மண்டலத்தரசே!'' என்று
தென்னவர் போற்ற நாதச் செந்தமிழ் குழலிற் கண்டோய்!

''செவியினில் ஓடி, எங்கள்
சிந்தையில் ஓடி இந்தப்
புவியெலாம் ஓடி நின்பால்
பொங்கிய தோடி வேறிங்கு
எவரிடம் போகும்? ஐய!
இனியதைக் காப்பார் யாவர்?''




-கவிஞர் கண்ணதாசன்

நமது நண்பர் ராஜரத்தினம் அவர்களது நாயனத்தைத் தொலைவில் நின்று கேட்க நேரிட்டால், அங்கு ஏதோ வீணை வாசிக்கப்படுகிறது என்றும், சில வேளைகளில் குழல் ஒலி எழும்புவதாகவும், இன்னும் சில வேளைகளில் முழவொலி கிளம்புகிதென்றும் சந்தேகப்படுவர்.

*- அறிஞர் அண்ணா.*

ஆஹா! ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளையின் தோடி ஆலாபனையை முதல் முதலில் கேட்ட போது - நம்முடைய மனத்தில் என்னனென்ன இன்பமயமான கற்பனைகள் எல்லாம் உதித்தன.

குழந்தை தாயிடம் கொஞ்சும் குரலைக் கேட்டோம். அன்னை குழந்தையிடம் கொஞ்சம் குரலைக் கேட்டோம். ரதியும் மன்மதனும் பேசிக் கொண்ட காதல் மொழிகளைக் கேட்டோம். முருகன், சிவபெருமான் செவி குளிர பொழிந்த உப்தேசத்தைக் கேட்டோம். கலைமகள் கவிஞனுக்கு அருளிய ஆசி மொழிகளைக் கேட்டோம். நாரத முனிவருடைய தம்புரா சுருதியைக் கேட்டோம். இராவணன் தன் எலும்பையொடித்து வீணையாகச் செய்து வாசித்த கானத்தைக் கேட்டோம். கானப் பறவைகளின் கலகலத்வனியைக் கேட்டோம். கோலக் குயில்களின் குரல் இனிமையைக் கேட்டோம்...

*- கல்கி*

"என்னிவன் வளர்த்த பேறு எப்படிப் பயின்றான் இந்தச்<br>
சின்னதோர் குழலுக்குள்ளே செகத்தையே உருட்டும் பாடம்!<br>
மன்னவன் இவனே! நாத மண்டலத்தரசே!" என்று<br>
தென்னவர் போற்ற நாதச் செந்தமிழ் குழலிற் கண்டோய்!

*- கவியரசு கண்ணதாசன்*